கிறிஸ்தவ

# வரலாற்று சுவடுகள்




**அலுவலக முகவரி**
கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4),வடக்குத்தெரு,
பங்களா சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (திருநெல்வேலி)

மின்னஞ்சல்: christianhistorical@gmail.com
தொலைபேசி: +91 9176780001
+91 7538812218


## உள்ளே


- கிறிஸ்துவின் சுப செய்தி
- எது நற்செய்தி
- இசையில் நற்செய்தி
- ஜெபபுத்தக அர்த்தங்கள்
- அருட்திரு.வேதமுத்து
- மாணவர் நற்செய்தி முகாம்
- நற்செய்தி அறிவிக்கும் உத்திகள்
- யார் இந்த மிஷனரிகள்
- கிறிஸ்துவும் நற்செய்தி அறிவிப்பும்


## மாத இதழுக்காக சந்தா விபரம்

| | |
|---|---|
| மாத சந்தா | ரூ 60/- + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ரூ 600/- + நன்கொடை |
| ஆயுள்சந்தா | ரூ 3000/- + நன்கொடை |


Bank :- Federal Bank
Account name :- Tinnevelly Christian Historical Society
Account number :- 17480200003684
IFSC Code :- FDRL0001748


பணம் செலுத்திய பின்பு செலுத்திய விபரத்தையும் உங்களுடைய முகவரியையும் மறக்காமல் கிழே கொடுக்கப்படுள்ள தொலைபேசி அல்லது மின்னஞ்சல் முகவரி மறக்காமல் தெரிவிக்க அன்புடன் தெரிவித்துக்கொள்கின்றோம்.


மின்னஞ்சல்: christianhistorical@gmail.com
தொலைபேசி: 04633 290401, 04633 261101
www.tchsportal.co.in



# ஆசிரியரின் சுவடு

கிறிஸ்துவுக்குள் அன்பான இறைமக்கள் அனைவருக்கும் ஆண்டவர் இயேசு கிறிஸ்துவின் அதிசய நாமத்தில் அன்பு நல்வாழ்த்துக்கள் மற்றும் இனிய வணக்கங்கள்.

நமது கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் சார்பில் கடந்த ஜூன் மாதம் முதல் கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள் என்ற மாதாந்திர ஆய்வு இதழை மாதந்தோறும் வெளியிடும்படியான நல்லதொரு வாய்ப்பை ஆண்டவர் நமக்கு தந்து வருகிறார். நமது கிறிஸ்தவ வரலாற்று சங்கம் 10 அம்ச செயல் திட்டங்களோடு மிகச்சிறப்பாக செயல்பட்டு வருகிறது.



பத்து அம்ச செயல் திட்டத்தில் முக்கிய செயல் திட்டமான மாதாந்திர ஆய்விதழ் வெளியிடும் பணியில் நமது ஆய்விதழின் பதிப்பாசிரியர் அவர்களும் ஆய்விதழின் வடிவமைப்பாளர் அவர்களும் சிறப்பாக செயல்பட்டு வருகிறார்கள். குறித்த நேரத்தில் முதலாவது, இரண்டாவது, மூன்றாவது, நான்காவது மாதாந்திர ஆய்விதழ்கள் வெளிவரும் படி செய்துள்ளார்கள். இருவரோடும் இணைந்து இப்பணியைச் செய்ய ஆண்டவர் எனக்கு அருள் புரிந்தமைக்காக ஆண்டவருக்கு நான் மிகுந்த நன்றி செலுத்துகிறேன். ஆண்டவருக்கே மகிமை உண்டாவதாக. நிறைவேறி வரும் நமது சங்கத்தின் நோக்கம், வரலாற்று ஆர்வலர்களுக்கு இந்த மாத இதழ் வரலாற்றுப் பொக்கிஷமாக இருப்பது குறித்து அநேகர் மூலம் அறிகிற போது மிகுந்த மகிழ்ச்சி அடைகிறோம்.

ஒவ்வொரு மாத இதழ்களையும் நாங்கள் வரிசைப்படுத்தி, பத்திரப்படுத்தி ஆவணமாக பாதுகாத்து வருகிறோம் என பலர் சொல்வதைக் கேட்கும் போது நமது கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் நோக்கம் நிறைவேறுவதை நாம் கண்ணார காண்கிறோம்.

நம்முடைய சங்கத்தின் மாதாந்திர ஆய்விதழ் ஒவ்வொரு மாதமும், குறிப்பிட்ட தலைப்பின் கீழ் வெளிவருகிறது என்பதைக் கடந்த மாத இதழில் தெரிவித்திருந்தோம். முதலாவது மாத ஆய்விதழ் தென்னாட்டு கிறிஸ்தவம் என்ற தலைப்பிலும் இரண்டாவது மாத ஆய்விதழ் கிறிஸ்தவமும் விழாக்களும் என்ற தலைப்பிலும் மூன்றாவது மாத ஆய்விதழ் கிறிஸ்தவமும் விடுதலையும் என்ற தலைப்பிலும் வெளிவந்தது.

இம்மாத ஆய்வு இதழ் (செப்டம்பர் மாதம்) கிறிஸ்தவமும் நற்செய்தி அறிவிப்பும் என்ற தலைப்பின் கீழ் வெளியிடப்பட்டுள்ளது. நமது அக்டோபர் மாத ஆய்வு இதழின் தலைப்பு **கிறிஸ்தவமும் தலைமைத்துவமும்** என தீர்மானிக்கப் பட்டுள்ளது. இதற்கான வரலாற்றுக் கட்டுரைகளை செப்டம்பர் மாதம் 15 க்குள் நமது மாத இதழின் பதிப்பாசிரியர் அவர்களுக்கு அனுப்பி வைக்க அன்புடன் வேண்டுகிறேன். அதேபோன்று நமது மாத இதழுக்கான ஆண்டு/ஆயுள் சந்தாவையும் பதிப்பாசிரியர் அவர்களுக்கு அனுப்பி இந்த ஆய்விதழ் பணிக்கு உதவிட அன்புடன் வேண்டுகிறேன்.

ஜான் ஞானராஜ்
ஆசிரியர்
கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்

---

ஆபிரகாம் பண்டிதர் நினைவு ஆராய்ச்சி நூலகமானது தமிழ் கிறிஸ்தவ மின்னனு நூலகத்தில் முதல் நூலகம். இந்த நூலகமானது தமிழ் கிறிஸ்தவ வரலாற்று ஆய்வாளர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், தமிழ் கிறிஸ்தவ ஆராய்ச்சி மாணவர்களுக்கும் பயன்படும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் ஒரு புதிய மைல் கல்லாகவும் அமையும் மற்றும் அநேக புதிய தமிழ் கிறிஸ்தவ எழுத்தாளர்களை உருவாக்கவும், ஆராய்ச்சியாளர்களை உருவாக்கவும் ஏற்ப்படுத்தப்பட்டுள்ளது.

**பல அரிய கிறிஸ்தவ தமிழ் புத்தகங்கள் தற்போது நமது இணைய நூலகத்தில்**




தமிழ் புத்தக வரலாற்றில் இல்லாததை தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் லாப நோக்கம் இல்லாமல் ஆயிரக்கணக்கான புத்தகங்களையும் ஆய்வு நூல்களையும், வரலாற்று பொக்கிஷங்களையும் சுமந்து கொண்டு தமிழ் கிறிஸ்தவ வரலாற்றில் அடுத்த மைல் கல்லை உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்தில் இறையியல் மாணவர்ககளுக்காகவும் ,எழுத்தாளர்களுக்காகவும் வரலாற்று சங்கம் இந்த திட்டத்தை கொண்டு வந்துள்ளது.

www. library.tchsportal.co.in

# கிறிஸ்துவின் சுப செய்தி



**திருமதி நிருபா ஜெசுவடியான்**
**சென்னை**

"தேவசித்தம் உலகெங்கும் சுவிசேஷம் அறிவிக்கவேண்டும் என்பது. நீ அதை செய்யாவிட்டால் தேவசித்தத்தை எதிர்க்கிறவனாவாய்" என்று தேவமனிதர் ஆஸ்வால்டுஸ்மித் கூறுகிறார். அநேக நேரங்களில் நாம் தேவனை அறிந்ததினால், சத்தியத்தை ஏற்றுக்கொண்டதினால் நம்மை குறித்து பெருமைபட்டுகொள்கிறோம். ஆனால் நம்மிடமிருந்து மக்கள் கர்த்தருடைய அன்பையும், இரக்கத்தையும் அறிந்து கொள்ள வேண்டுமென விரும்புகிறோமா? கிறிஸ்துவின் இரண்டாம் வருகைக்குள், சகல ஜாதிகளுக்கும் சுவிசேஷம் முந்தி பிரசங்கிக்கப்பட வேண்டும் என்பதே தேவனுடைய சித்தமும், வாஞ்சையுமாகும். தேவசித்தத்தை அன்பின் கட்டளையாக ஏற்று கொண்டு புறப்பட்டு வந்த ஊழியர்களால் மட்டுமே, இன்று நாம் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டு அவருடைய பிள்ளைகளாக வாழும் பாக்கியத்தைப் பெற்று இருக்கிறோம். புறப்பட்டு வந்த ஊழியர்கள் ஒன்றும் சாதாரணமானவர்கள் அல்ல. நல்ல குடும்பம், அந்தஸ்து கொண்டவர்களாக, கல்வியில் தேறினவர்களாக, செல்வாக்குமிக்கவர்களாக இருந்தார்கள். கிறிஸ்துவின் சித்தத்தை நிறைவேற்ற தங்கள் இனம், கலாச்சாரம், படிப்பு என அனைத்தையும் இழக்கத்துணிந்தார்கள். அவர்கள் சந்தித்த எதிர்ப்புகள், அவமானங்கள், இழப்புகள் போன்றவற்றை தேவபெலத்தோடு மேற்கொண்டார்கள். இவர்கள் வரிசையில் ஆர்தர் மார்காஷிஸ் என்ற மருத்துவரும் ஒருவர்.

இங்கிலாந்து தேசத்தில் தனது மருத்துவ படிப்பை படித்து, முதுகலை தேர்வுக்கு ஆயத்தமாகி கொண்டிருந்த போது, கால்டுவெல் ஐயர் அவர்கள் மூலம் இந்திய தேசத்தின் தேவையை கேட்டறிந்தார். 22 வயது வாலிபனான மார்காஷிஸ் தன்னுடைய மருத்துவ படிப்பை பாதியிலேயே விட்டு விட்டு, 1875ம் ஆண்டு இந்திய மண்ணில் கால் பதித்தார். இடையன்குடியில் பணியாற்றி வந்த கால்டுவெல் ஐயரிடம் ஊழிய பயிற்சியையும், தமிழ் மொழியையும் கற்று தேர்ந்தார். 1876ம் ஆண்டு நாசரேத் ஊரில் தன்னுடைய பணியை ஆரம்பித்தார். அவர் அங்கு வந்த போது பெரும் மழை, பஞ்சம், காலரா என முழு கிராமமே திண்டாடியது. காலரா வியாதியால் பலர் மடிந்தனர். அவர்களது குடும்பத்தினரும், பிள்ளைகளும் அனாதைகளானார்கள். அவர்களை பராமரிப்பதற்காக மார்காஷிஸ் ஒரு இல்லத்தை திறந்தார். ஜாதி, மதம் என எந்த வேற்றுமையுமின்றி பலர் இங்கு தஞ்சம் புகுந்தனர். அந்த இல்லம் "அனாதை சாலை" என அழைக்கப்பட்டது. அது வெறும் அடைக்கலம் தரும் இடமாக மட்டுமல்லாது, பல தொழில் புரிவோர், போதகர்கள், ஆசிரியர்கள் போன்றோர்களை உருவாக்கும் சரித்திர பூமியாக மாறியது.

> "கிறிஸ்துவின் சித்தத்தை நிறைவேற்ற தங்கள் இனம், கலாச்சாரம், படிப்பு என அனைத்தையும் இழக்கத்துணிந்தார்கள்."

**மார்காஷிஸ் ஆற்றிய சேவைகள்:**

காலராவினால் பாதிக்கப்பட்டவர்களை குணப்படுத்த பல முயற்சிகளை மார்காஷிஸ் ஐயர் மேற்கொண்டார். தேவனால் மட்டுமே இம்மக்களை குணமாக்க முடியும் என்பதை அறிந்து அவசர அவசரமாய், ஆலயத்திற்குள் நுழைந்து அழுது ஜெபித்தார். மணிக்கணக்காய் மன்றாடிய அவரது ஜெபம் கேட்கப்பட்டது. தினசரி திருவிருந்து ஆராதனை முறையை நடைமுறைப்படுத்தினார். மக்கள் மத்தியில் காணப்பட்ட மரணபயத்தைக் களைத்து அவர்களுக்கு நம்பிக்கை அளித்தார்.

அனாதை சாலை இல்லம் 1878ல் கைத்தொழில் பள்ளியாக மாறியது. அனாதைப் பிள்ளைகளுக்கு மார்காஷிஸ் கைத்தொழில் கற்றுக் கொடுத்ததால், மக்களால் சுயமாக வேலை செய்து பணம் சம்பாதிக்க முடிந்தது.

இங்கு தங்கிப் படித்த பெண்களின் எதிர்கால வாழ்வில் அக்கறை காட்டினார். அவர்களுக்கு ஏற்ற வாழ்க்கைத் துணையைத் தேடிக் கண்டுபிடித்து திருமணமும் செய்து வைத்தார்.

இங்கு பயின்ற மாணவர்களுக்கு ஆசிரியர் பயிற்சிப் பள்ளியையும் ஊழியம் செய்யும் உபதேசியார்களுக்கு இறையியல் கல்லூரியையும் ஆரம்பித்து நடத்தினார்.

நாசரேத்து தபால் அலுவலகத்திற்கு தந்தி வசதியை பெற்றுத்தந்தார். மக்களின் நன்மைக்காக செயல்பட்டதால் கைசர் -இ - ஹிந்த் என்ற விருதை அரசிடமிருந்து பெற்றார்.



1870இல் அருள்திரு.ஸ்ட்ராஹன் ஐயரால் நாசரேத்தில் மருத்துவமனை ஆரம்பிக்கப்பட்டது. 1892ல் மார்காஷிஸ் அம்மருத்துவமனைக்கு புதுப் பொலிவையும், வளர்ச்சியையும் தந்து பராமரித்து வந்தார். சுமார் 20-30 மைல் தூரத்தில் இருந்தும் வந்த ஆயிரக்கணக்கான மக்களுக்கு சிகிச்சை அளித்தார். மருத்துவமனையில் பல கட்டிடங்கள், படுக்கையறைகள் போன்ற வசதிகளை செய்து புனித லூக்கா மருத்துவமனை என பெயரிட்டார். மரத்திலிருந்து விழுந்து படுகாயமடைந்த நிலையில் மருத்துவமனைக்குக் கொண்டு வந்த சிறுவனை, மார்காஷிஸ் தன்னை குணப்படுத்த எடுத்துக்கொண்ட முயற்சியை

பார்த்து தான் குணம் பெறாத நிலையிலும் பெற்றோர் சம்மதத்துடன் ஞானஸ்தானம் பெற்று கிறிஸ்தவனாக மரித்தான். அதனை கண்ட அவனது பெற்றோரும் உறவினர்களும் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டனர். இவ்வாறு தன்னுடைய பணியில் கிறிஸ்துவை உலகிற்கு காண்பித்தார்.

பெண்களுக்கு கல்வி வசதி செய்து கொடுத்ததோடு பெண்கள் உயர்நிலைப் பள்ளியையும் ஸ்தாபித்தார்.

ஆயுள் காப்பீட்டு முறையை அறியாத அக்காலத்திலேயே எதிர்கால சகாய நிதி என்ற நிதி அமைப்பை தொடங்கி வைத்தார்.

மர்காஷிஸ் ஐயரின் வேத அறிவை பாராட்டி சென்னை பேராயர் இவரை canon ஆக்கினார். அரசும் இவரை பாராட்டியது. சென்னை பல்கலைக்கழகம் இவரை தங்கள் குழுவில் ஒருவராக தேர்வு செய்தது.

1876 ஆம் ஆண்டு ஊழியத்தை ஆரம்பித்த இவர், இரண்டு ஆண்டிற்குள் 14 சபைகளை உருவாக்கினார். தமது பணி நாட்களில் சுமார் 25க்கும் அதிகமான புது சபைகளை உருவாக்கினார். அவர் மரிக்கும் போது இரண்டு உயர்நிலைப்பள்ளிகள், ஒரு கைத்தொழில் கல்வி நிலையம், இரண்டு அனாதை பிள்ளைகளுக்கான விடுதிகள், ஒரு வேதாகமக் கல்லூரி, பல கிராமங்களில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் பள்ளிகள் போன்றவை நிறுவப்பட்டன.

மர்காஷிஸ் அய்யர் ஆஸ்துமா வியாதி, வாத நோயினாலும் அடிக்கடி கஷ்டப்பட்டாலும் கிறிஸ்துவின் மீது அவர் கொண்டிருந்த அன்பினால் அவருடைய ஊழியம் தடைபடவில்லை. மருத்துவ சிகிச்சைக்காக பலமுறை ஜப்பான், ஆஸ்திரேலியா போன்ற நாடுகளுக்கு சென்ற போதிலும், குறுகிய மாதங்களில் மறுபடியும் நாசரேத்திற்கு வந்து தன் பணியை செய்தார். நாசரேத் நகரின் தந்தை என்று அழைக்கப்படும் மர்காஷிஸ், தான் வாழ்ந்தாலும், மரித்தாலும் நாசரேத்தில் மட்டுமே என்பதில் மிகவும் உறுதியாக இருந்தார். மர்காஷிஸ் அவர்களால் நாசரேத் என்று முதன்முதலில் பெயரிடவும் பட்டது.

அடிமைத்தனத்திலிருந்து விடுதலை காற்றை மக்கள் சுவாசித்தனர். விவசாயமும் விவசாயத்திலிருந்து விளைந்த பொருட்களும் எல்லா மக்களும் பயன்பெறத்தக்கதாக முயற்சி எடுத்தனர். நவீன விவசாய முறைகள் அறிமுகப்படுத்தப்பட்டு நிலங்கள் ஒழுங்குபடுத்தப்பட்டன. இப்படி பல்வேறு சீர்திருத்த பணிகள் நமது ஊழியர்களால் நிறைவேற்றப்பட்டன.ஒரு கிராமம் சிறந்து விளங்குவதற்கு பின்னால் மறைந்திருக்கும் போராட்டங்கள், சவால்கள், மேலும் காலம் காலமாக அங்கு மக்கள் அனுபவித்து வந்த பாடுகள், துன்பங்கள் ஆகியவற்றில் இருந்து விடுபட கிறிஸ்தவத்தின் பங்களிப்பு எத்தகைய அளவில் உதவியது என்பதற்கு நாசரேத்து போன்ற பல கிராமங்கள் சிறந்த சாட்சிகள் ஆகும். கல்வி மற்றும் மருத்துவம் ஆகிய இரண்டும் அடித்தள மக்களுக்கு எட்டாக்கனியாக இருந்த அக்காலத்தில் கிறிஸ்தவமும், நற்செய்தியும் மக்களுக்கு உதவி செய்தது என்றால் மிகையாகாது. கிறிஸ்தவமும் நற்செய்தியும் இல்லையெனில் நாமும் நம் முன்னோர்களும் தேவனுக்கு தூரமாக மட்டுமல்ல, அ டி மை த் த ன த் தி லே யே வாழ்ந்திருப்போம்.

"சமாதானத்தை கூறி
நற்காரியங்களை சுவிஷேசமாய்
அறிவித்து இரட்சிப்பை
பிரசித்தப்படுத்தி, உன் தேவன் ராஜரீகம்
பண்ணுகிறாரென்று சீயோனுக்கு
சொல்லுகிற சுவிஷேகனுடைய
பாதங்கள் மலைகளின் மேல் எவ்வளவு
அழகாயிருக்கின்றன!"
ஏசாயா52:7

## சுயநலம் விடுத்து பொதுநலம்

மன்னா செல்வகுமார்

மனிதப் பாவத்திற்குப் பல காரணங்களுண்டு; ஆசை, சுயம், பொறாமை, கோபம் இப்படியே சொல்லிக் கொண்டு போகலாம். ஒவ்வொன்றைப் பற்றியும் எழுதிக் கொண்டு போனால் முடிவிராது.'பானை சோற்றிற்கு ஒரு சோறு பதம்' என்பது போல் ஒரு சிலவற்றை சான்றாகக் கொண்டு மனித வாழ்வை செப்பம் செய்துக் கொள்வது நலம் பயக்கும். ஆசிரமப் பாமாலையில் பிறிதோரிடத்தில் பின்வரும் பாடல் பாவத்திற்குக் காரணம் சுயநலம் என்ற மையக் கருத்தைக் கூறி அதனால் வரும் இன்னல் இது என்றும், விட்டொழிந்தால் வரும் பயனிதுவென்றும் பக்தன் யோவான் பால்மர் பின்வருமாறு பாடுகிறார்.

பல்லவி

உன்தன் சுயமதியே நெறிளென்
றுகந்து சாயாதே ; - அதில் நீ
மகிழ்ந்து மாயாதே

சரணங்கள்

1. மைந்தனே, தேவ மறைப்படி யானும்
விழுந்தும்மதி தனைக் கேளாய் , - தீங்
கொழித் திகமனந் தாழாய் ; அருள் சூழாய்
உன்

4 . நான் எனும் எண்ணம் ஆதால் பிறரை
அதின்
மானிப்பது வெகு பாவம் ; - அதின்
மேனிற்குமே தேவ கோபம் ; மனஸ்தாபம்'
உன்

ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட மேற்காணும் பாடலின் மூலம் ஒவ்வொரு தனிமனிதனும் தன்னுடைய சுயநலத்தை ஒழித்துப் பொதுநலப் பாதையில் அடியெடுத்துப் பயணிக்க அறைகூவல் விடுத்தது புலனாகிறது.

சாதி, சமயச் சடங்குகள்,மரபுசார் நம்பிக்கைகள், பண்பாடு ,கலாச்சாரம் என்ற பெயரில் மக்களின் மூளைக்கு விலங்கிட்டு சமூகத்தில் ஆங்காங்கே ஒருசிலர் தங்களை மேல்மட்டத்தினராக காண்பிக்கும் ஒரே நோக்கத்தில் அடுத்தடுத்த அடைமை முறைகளை அறிமுகப்படுத்திக் கொண்டே வாழ்கையைத் தக்கவைத்துக் கொண்டிருந்த சமூகத் தீமை இன்றுவரை இருந்து கொண்டுதான் இருக்கிறது.

இந்நிலையின் ஆரம்ப காலகட்டம் மிகக் கொடூரமானதாக வரலாற்றுப் பின்புலங்கள் சுட்டி நிற்கின்றன.

அறியாமைகளின் அளவைப் பொறுத்தே ஒரு நாடு அல்லது சமூகம் புறத்தையார்களின் கொடுக்குப் பிடிக்கு இலக்காகும் தன்மையை தெளிவாக வெளிப்படுத்தும். இயற்கை வளமும் சிறந்த கலாச்சார மரபுக்களையும் தாங்கி நின்ற நமது தேசமும் அதன் சிறப்புகளை மக்கள் மற(றை)க்கும் அளவு அறியாமை திரைகளுக்குள் மூழ்கிக்கிடந்தது.

பல இனத்தவரும் மதத்தினரும் ஒன்றிணைந்து வாழ்ந்த கூட்டுச் சமூகத்தில் சொந்த நாட்டினரே ஒருவரையொருவர் சாதி, சமய, பொருளாதார மற்றும் அரசியல் சார்ந்த அடிமைத் தனங்களைப் போட்டிப்போட்டு திட்டமிட்ட ஆதிக்கத்தை செலுத்திவந்தனர்....!

வேடிக்கையான இந்நிலையை நமது நாட்டிற்கு நாடு கண்டு போக வந்தோர் பலரும் வியந்துரைத்துப் போயிருக்கின்றனர்.இதுவே ஐரோப்பியர்களின் இந்திய காலனியாதிக்கத்திற்கும் அடிகோலியது என்பர்...!

இந்திய கலாச்சாரத்தின் ஒருபகுதியான சாதியவெறி தங்களுக்குக் கீழிருந்த சாதியினரை ஆதிக்கம் செய்து மகிழ்வதிலேயே தன்நிறைவைப் பெற்றுக் கொண்டிருந்தன. தங்களுக்கு மேல்நிலையிலிருந்தோருக்கு அடிபணிந்து போவதை பெருமையாக காண்பித்தும் தங்களுக்கு கீழிருந்தோருக்கு அதை பாடமாக கற்பித்தும் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தனர். இதன் நிறுத்தமற்ற, கண்சொருகிப் போன, மிக மலிவான எண்ண தாக்குதல்களால் சமூகம் கூறுபட்டுக் கிடந்தது...!

இந்நிலையில் வாணிப நோக்கில் வந்த ஐரோப்பியர்களுக்கு சமயப் போதனைகளும் வழிபாட்டு முறைமைகளையும் மேற்கொள்ள வந்த பாதிரிமார்களால்

# எது நற்செய்தி....???

## ( ஒரு வரலாற்றுப் பார்வை)

Dr. ஜான்சிபால்ராஜ்
வன்னியன்குடியிருப்பு

இந்தியர்களிடையே கிறித்தவம் பரவத் தொடங்கியது. ஆரம்பத்தில் வந்த கத்தோலிக்க பாதிரிமார்கள் பலரும் இங்கிருந்த மக்களின் சாதி, சமய நிலைமைகளை முழுமையாக அறிய இயலாமல் அவர்களிடமிருந்த சாதியத்தையும் சேர்த்தே கிறித்தவத்தில் சேர்த்தனர். அவரவர் சாதி முறைமைகளை விட்டு விட வேண்டியதில்லை, கிறிஸ்துவை ஏற்றால் போதும் என்ற விதத்திலேயே சுவிசேஷத்தை நற்செய்தியாக அறிவித்தனர். குறிப்பாக ராபர்ட் டி நொபிலி தன்னை இத்தாலிய பிராமணன் என்று சொல்லிக் கொண்டு உயர் சாதியினராக கருதப்பட்ட பிராமணர்களுக்கு கிறிஸ்துவை நற்செய்தியாக அறிவிக்க முயன்றார். அவரது நோக்கம் சமூகத்தின் உயர்மட்டத்தினரை ஏற்க செய்துவிட்டால் ஏனையோர் எளிதில் போலசெய்தல் என்ற பின்பற்றும் இயல்பினால் எளிதில் ஏற்க செய்துவிடலாம் என்றிருப்பினும் மறைமுகமாக கிறித்தவம் உயர்சாதியினருக்கானது என்ற தவறான போக்கிற்கு அவரது செயல்பாடு வழிவகுத்து நின்றது.

கான்ஸ்டன்டைன் நோபிள் என்னப்பட்ட வீரமாமுனிவரைத் தவிர மற்றையோர் அனைவருமே தமிழகத்தின் சாதியக் கொள்கைகளை அதன் விஷமம் புரியாமல் அப்படியே ஏற்றிருக்கின்றனர்.

இதன் நீட்சியாகவே, சமத்துவத்தை உலகிற்கு போதித்த கிறித்தவ இந்திய தேவாலயங்களுக்குள்ளும் சாதிப்பாகுபாடு கடைபிடிக்கப்பட்டது. மிகக் குறைவான எண்ணிக்கைகளில் தான் அன்றைய உயர்ந்த சாதியினராக கருதபட்டோர் கிறித்தவத்தை ஏற்றிருந்தனர்.

அவர்களும் ஆலயத்திற்குள் மற்ற தாழ்த்தப்பட்ட சாதியினர்களோடு அமரவோ புனித திருவிருந்தென்ற ஐக்கியத்தில் பங்கு பெறவோ மாட்டோம் என்றதால் அவர்களுக்கு ஒரு திசையிலும் மற்றவர்களுக்கு நேர் எதிர் திசையிலும் இடமளிக்கப்பட்டு ஆராதனைகள் நடைபெற்றிருக்கின்றன...!

ஆரம்பகால தமிழக கிறித்தவத்தில் அனுமதிக்கப்பட்ட இப்பிழையான அனுசரிப்பால் இன்றுவரை ஒரே ஊரில்

**மனித குல மேம்பாட்டிற்காக அறிவிக்கப்படும் வார்த்தைகள் நற்செய்திகளாகதான் இருக்க முடியும்.... !**

.....இதோ எல்லா மக்களுக்கும் மிகுந்த சந்தோஷத்தை உண்டாக்கும் நற்செய்தியை உங்களுக்கு அறிவிக்கிறேன்.( லூக்கா 2:10).

சாதிக்கொரு சபையென்பது கிறித்தவ கொள்கைகளுக்கு எதிரான தவறென்ற உணர்வின்றி மிக எதார்த்தமாக எடுத்துக்கொள்ளும் மனப்போக்கை ஏற்படுத்தியிருக்கிறது என்பது உண்மை.

இந்நிலை சுமார் இ ரு நூ ற ா ண் டு க ள் தொடர்ந்து கிறித்தவத்தில் புரையோடி போய் சாதியத்தின் தாக்கத்தை அதிகப்படுத்தியிருந்தது.

பின்னர் 18 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் ஏற்பட்ட கிறித்தவ சமய எழுப்புதலினால் இந்தியாவிற்கு மிஷனெரிமார்களின் வருகை அதிகரிக்கத்தது. இவர்கள் புரட்டஸ்தாந்து (Protestant) பிரிவு கிறித்தவத்தினர். இவர்களும் ஏற்கனவே இருந்து வந்த சாதியக் கொள்கைகளை ஏற்பது தான் சமயப்பணிக்கு சாத்தியம் என்று கருதி செயல்பட்டனர் .இதற்கு விதிவிலக்காக ஒன்றிரண்டு மிஷனெரிகள் சாதிப் பாகுபாட்டினால் மக்கள் அடையும் இன்னல்களையும் மனிதாபிமானமற்ற நடவடிக்கைகளையும் நீக்க முயற்சித்திருக்கின்றனர்.

அவர்களுள் திருநெல்வேலி அப்போஸ்தலன் என்ற பெருமைக்குரிய சார்லஸ் தியாப்பிலஸ் ஈவால்ட் ரேனியஸ் ஐயர் முதன்மையானவர். ஜெர்மன் தேசத்தினரான இவர் கி.பி 1814 ஆம் ஆண்டு இந்தியா வந்து, 1820 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையை தலைமையிடமாக கொண்டு திருநெல்வேலி மாவட்டம் முழுவதும் ஒரு சிறு பகுதியைக் கூட விடாமல் சுவிசேஷத்தை நற்செய்தியாய் அறிவிக்க அரும்பாடுபட்டார்.

ஆனால் அவரது பணிகளை ஆய்வு செய்தால் அவர் வெறுமனே கிறித்தவ சமயப்பணிகளை மட்டுமே செய்யவில்லை…மக்கள் மீது உண்மையான அன்பும் கரிசனையும் கொண்டவர். தமிழகத்தில் காணப்பட்ட சாதியம் சார்ந்த அடக்குமுறைகளையும் தீண்டாமை கொடுமைகளையும் கண்டு அவற்றை களைய முற்பட்டார். குறிப்பாக சாதிப்பாகுபாடற்ற தமிழ்ச் சமூகம் உருவாக வேண்டுமென கனவு கண்டார். எனவே முதலில் கல்விப்பணியைத் துவங்கிய அவர், அதில் எள்ளளவும் சாதிப்பாகுபாடுகள் இருந்துவிட கூடாதென்பதில் மிகக் கவனமாக செயல்பட்டார். மாணக்கர்கள் தங்களுக்குள் எவ்வித ஏற்றத் தாழ்வுகளும் இன்றி கல்வி கற்க வேண்டும் என வலியுறுத்தினார். தாம் சமயப்பணி செய்த ஊர்களிலெல்லாம் பள்ளிகளையும் ஏற்படுத்தினார். அதில் பணியாற்ற ஆசிரியர்களுக்கு முறையான பயிற்சிகளை அளிக்க வேண்டி, தங்கும் விடுதியுடனான ஆசிரியப் பயிற்சி பள்ளியும் (செமினெரி) நடத்தினார். அதில் சாதி வேறுபாடு பாராட்டிய உயர்சாதி மாணாக்கர்கள் தங்களுக்கும் தாழ்ந்தசாதியின மாணாக்கர்களுக்கும் இடையே தடுப்புச் சுவர் அல்லது தட்டி மறைவு வைக்க வேண்டும் என்று ரேனியசோடு வாதிட்டனர். ஆனால் எவ்விதத்திலும் சாதிவேறுபாட்டை செமினெரியில் அனுமதிக்க மாட்டேன் என்று மறுத்து விட்டார். அவர்களது பார்வையில் இல்லாமலாவது நாங்கள் இருந்து உணவு உண்கிறோம்… இல்லையேல் எங்களை சாதியை விட்டே நீக்கிவிடுவர் என்று கெஞ்சியும் அனுமதி தர மறுத்து சாதிவேறுபாட்டை அனுசரித்து தான் இதை நடத்தியாக வேண்டுமென்றால் இந்தச் செமினெரியே வேண்டாமென்று அதை மூடிவிட்டார். 1818 ல் துவக்கப்பட்ட அச்செமினெரி அவரது இப்புரட்சிகரமான சிந்தனையால் 1821ல் மூடப்பட்டது. ஆனாலும் மிகவிரைவில் சாதிமத பேதமற்ற ஆசிரிய பயிற்சிப் பள்ளியாக திறக்கப்படும் என்ற அவரது நம்பிக்கை வீண் போகவில்லை. மீண்டும் அது 1822ஆம் ஆண்டு திறக்கப்பட்டு சாதிப் பாகுபாடற்ற பள்ளியாக நடைபெற்றது. அதில் ஒருபோதும் சாதி வேறுபாட்டை கடைபிடிக்கவே விடவில்லை.

கிறித்தவ மிஷனெரிமார்கள் இந்தியாவில் கல்விப் பணியையும் இன்னும் பிற சமூகப்பணிகளையும் அவர்களது சமயப்பணியின் வளர்ச்சிக்காகவே செய்து போயினர் என்ற வரலாற்றாசிரியர்கள் சிலரின் கூற்று ஏற்கத் தக்கதல்ல…! இந்தியர்களிடையே திட்டமிட்டு உருவாக்கப்பட்ட இச்சாதியத்தை அயல்நாட்டினரான மிஷனெரி ரேனியஸ் தான் முதன் முதலில் எதிர்த்தவர் என்பது இந்திய சாதி எதிர்ப்பு வரலாற்றில் மறைக்கப்பட்ட அல்லது கண்டு கொள்ளப் படாத உண்மை.

தமிழகத்தில் ரேனியஸ் மேற்கொண்ட இதே சாதி எதிர்ப்பை கிட்டத்தட்ட நூறு ஆண்டுகளுக்குப் பிறகு கி.பி 1924 ஆம் ஆண்டு சமத்துவத்தை விரும்பிய சில அரசியல் தலைவர்களால் திருநெல்வேலியில் உள்ள சேரன்மாதேவியில் ஏற்படுத்தப்பட்ட தமிழ் குரு குலத்திலும் ரேனியஸ் செமினெரியில் நடந்த அதே சாதிப்பாகுபாடு காணப்படுவதை அறிந்து அதற்கு எதிராக நடந்த சர்ச்சைகள் ஏராளம். அந்தச் சமூக ஆரோக்கியத்திற்கு அடிகோலிய அப்போராட்டம் குருகுலப் போராட்டம் (கி.பி1925) என்று வரலாற்றில் குறிப்பிடப்பட்டு வியக்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

ம னி த ச் சமூகத்தின் உள்ளார்ந்த வளர்ச்சிகளுக்கு முக்கியமளிக்கப்படாத வெற்று சமயப் பக்திகளும் அதுசார்ந்த செயல்பாடுகளும் என்றும் நிலைப்பதில்லை, மக்கள் மனத்திலும் கடவுளின் பார்வையிலும்..!!

ஆக… உண்மையான நற்செய்தி என்பது இம்மைக்கும் மறுமைக்கும் அதை அறிவிப்போருக்கும் அறிவிக்கப்படுவோருக்கும் நலம் பயக்கும் ஒன்றாகும்.

> **என் இயேசுவை பாடிய வாயால், வேறொருவரையும் புகழ்ந்து பாடேன்**
>
> **— சாஸ்திரியார்**

# இசையில் நற்செய்தி

I.J ஜெபராஜ்
குருத்துவ மாணவர்



இங்கிலாந்து தேசத்தில் நற்செய்தி பணியானது, ஜார்ஜ் வொயிட்பீல்டு, மற்றும் வெஸ்லி சகோதரர்களின் ஊழியங்களால், பதினெட்டாம் நூற்றாண்டில் விறுவிறுப்படைந்தது. ஆயினும், ஆரம்ப நாட்களில் இப்பணி, சமுதாயத்தின் கீழ்நிலை மக்கள் மத்தியில் தான் சிறப்பாக நடைபெற்றது. பின்னர் 19 - ம் நூற்றாண்டில், உயர்நிலை மக்களும் நற்செய்திப் பணியில் ஆர்வம் காட்ட ஆரம்பித்தனர். தென்கிழக்கு லண்டனின் கிளாபம் என்ற பகுதியில் உள்ள வசதி படைத்த மக்கள், வேத போதனையிலும், ஜெப ஐக்கியத்திலும் உறுதியுள்ளவர்களாய், பல இடங்களிலும் நற்செய்தி பரவ செயல்பட்டனர். இம்மக்கள் இங்கிலாந்து திருச்சபையின் அங்கத்தினர்களாகத் தொடர்ந்து நிலைத்திருந்து, நற்செய்தி பணியை உற்சாகமாகச் செய்து வந்தது குறிப்பிடத்தக்கது.

இப்படிப்பட்ட ஊழிய வாஞ்சை நிறைந்த ஒரு செல்வந்தரின் மகளாக, கேத்தரின் ஹான்கே 1834-ம் ஆண்டு பிறந்தார். தந்தையின் சுவிசேஷ பாரம், மகளின் உள்ளத்தையும் நிரப்பிற்று. தன் வாலிப வயதிலேயே, லண்டன் மாநகரின் பலதரப்பட்ட பிள்ளைகளுக்கு, ஞாயிறு பள்ளிகள் அமைத்து, சிறுவர் ஊழியம் செய்தாள். இப்பணியின் மூலம், அநேக வாலிபர்கள் ஊழியர்களாக எழும்பினார்கள். கேத்தரின் கவிதைகள் மற்றும் கட்டுரைகள் எழுதுவதில் திறமை மிக்கவள். இத்தாலந்துகள் மூலம் அவள் சம்பாதித்த பணம் அனைத்தையும், தூர தேச மிஷனரிப் பணிகளுக்கென்று காணிக்கையாக அனுப்பி வைத்தாள்.

இவ்வாறு ஊழியம் செய்த கேத்தரின், தனது முப்பதாவது வயதிலேயே, கடுமையான வியாதிக்குள்ளானாள். வியாதிப் படுக்கையின் நாட்களையும் வீணாக்காமல், இயேசு கிறிஸ்துவின் இவ்வுலக வாழ்க்கையை, 50 சரணங்களடங்கிய ஒரு பெரிய கவிதையாக எழுதினாள். இருபகுதிகளாக எழுதப்பட்ட இக்கவிதையின் முதற்பகுதியின் தலைப்பு, 'தேவையான நற்செய்தி'. இப்பகுதியை மையமாகக் கொண்டு, 'தொன்மை மிக்க அந்நற்செய்தியை எனக்குக் கூறுங்கள்' என்ற பிரபல பாடலை அவள் எழுதினாள். பின்பு, அதே ஆண்டிலேயே, இரண்டாம் பகுதியின் அடிப்படையில், 'அந்நற்செய்தியை நான் விரும்புகிறேன்' என்ற இந்த அருமையான பாடலைத் தன் முதல் பாட்டிற்குப் பதிலாக அமையுமாறு எழுதினாள்.

இசையிலும் திறமையுள்ள கேத்தரின், இப்பாடலுக்கு ராகத்தையும் அமைத்தாள். பின்னர், 1867- ல் கனடாவின் மான்ட்ரியலில் நடைபெற்ற, Y.M.C.A.-ன் பன்னாட்டுக் கூட்டத்தில், மேஜர் ஜெனரல் ரஸ்ஸல் இந்தப் பாடலைத் தன் செய்தியில் அறிமுகம் செய்தார். அந்த மாநாட்டில் கலந்து கொண்ட அமெரிக்க இசை வல்லுனரான வில்லியம் D.டோயன் இப்பாடலை விரும்பியதால், அருமையான மற்றொரு ராகத்தை உருவாக்கினார். பின்னர் , பிலடெல்பியாவின் இசை மேதையான வில்லியம் G. பிஷர், இப்பாடலுக்கு புதியதொரு ராகம் அமைத்து, இப்பாடலின் பல்லவியையும் இணைத்தார். 1875 - ல் பிளிஸ் - சாங்கி வெளியிட்ட நற்செய்திப் பாமாலைகளும், பக்திப் பாடல்களும் என்ற புத்தகத்தில் இப்பாடல் இடம் பெற்று பிரபலமானது

நற்செய்தி கூறுவேனே !
மேலோர் காணாததை;
இயேசுவின் மகிமையை !
இயேசுவின் அன்பையே !
நற்செய்தி கூறுவேனே ! சத்தியமானதே;
என் வாஞ்சையை வேறொன்றும்
திருப்தி செய்யாதே,

நற்செய்தி கூறுவேனே ! மேலோகிலும்
அதுவே;
இயேகவின் அன்பைப்பற்றி நான் மீண்டும்
கூறுவேன்.

நற்செய்தி கூறுவேனே! ஆச்சரியமானதே;
பொன்மய கனவுகள் ஒப்பானதல்லவே;
நற்செய்தி கூறுவேனே ! எனக்கு செய்திட்ட
அனைத்திற்காகவுமே இப்போதே கூறுவேன்
- நற்செய்தி

நற்செய்தி கூறுவேனே !
மீண்டும் சொல்ல நன்றே;
சொல்லச் சொல்லச் செய்தியின்
இனிமை கூடுதே;
நற்செய்தி கூறுவேனே !
கேளார் இன்னும் உண்டே
தேவ தூய வார்த்தையின் ரட்சிப்பின்
செய்தியை. - நற்செய்தி

**ஒற்றுமையின்
சீர்குலைவுக்கு வித்திடுகிறவர்கள்
சுவிசேஷத்தின்
எதிராளிகள்.**

**– லெஸ்லி நியூபிகின்**

# ஜெப புத்தக அர்த்தங்கள்

ரெக்ஸ்

## விசுவாச பிரமாணத்தில் திருச்சபை

1

நம்முடைய விசுவாச பிரமாணங்களில் உள்ள நம் திருச்சபையை பற்றிய குறிப்புகள் பற்றி இந்த உரையாடலில் காண்போம்

ஹாய் கிளாடிஸ், எனக்கு ஒரு சந்தேகம். நம்ம ஆலயத்தைப் பற்றி தெளிவான விளக்கம் வேண்டும்? நாம யாரு? நம்ம நோக்கம் என்ன? நம்ம திருச்சபை பற்றிய விளக்கம் ஏதாச்சும் இருக்கா?

ஏன் இல்ல நம்ம திருச்சபையால் கிட்டத்தட்ட முதல் நூற்றாண்டிலிருந்தே பயன்படுப்பட்டு வருகின்ற, நம்முடைய ஜெப புத்தகத்தில நாம் சொலுகின்ற விசுவாசப் பிரமாணத்தில் விளக்கம் இருக்கு.

என்ன நம்ம பயன்படுத்துற ஜெபபுத்தகத்திலேயா? அது என்ன விளக்கம்?




நாம் சொல்லுகின்ற விசுவாசப் பிரமாணத்தில் நம்ம திருச்சபை ஒரே, பரிசுத்த, பொதுவான, அப்போஸ்தல சபை அப்படின்னு இருக்கு

அப்படியா அது என்ன? ஒரே பரிசுத்த பொதுவான அப்போஸ்தல சபை

நாம் எப்பவுமே இதை நம்ம விசுவாசப்பிரமாணத்தில் வாசிப்போமே! மறந்துட்டியா? சரி ஒன்னு ஒன்னா நான் சொல்றேன் கேளு.. நாம, நம்ம திருச்சபையை ஒரே சபை (ஐக்கியப்பட்ட சபை) -யினு சொல்றோம்.

ஒரே சபையா? விளையாடாத! நம்ம ஊரு உலகத்துல எத்தனை சபை இருக்கு! நாம எப்படி ஒன்றாக முடியும்?

நம்ம விசுவாசப்பிரமானம் இதுக்கு ஒரு நல்ல விளக்கத்தினை கொடுத்திருக்கு. திருச்சபை என்பது கிருஸ்துவாக்கிய ஒரே தலைக்குள்ளும், மேய்ப்பனுக்குளும் ஒரே மந்தையாக இருக்கிறது. அவருடைய சரீரத்தில் ஒரே ஆவியினாலே நாம் எல்லோரும் ஞானஸ்நானம் பெற்று கிறிஸ்துவோடுகூட ஒரே சபையாக பரி.நற்கருணையில் ஒரே அப்பத்திலேயும், ஒரே பாத்திரத்திலேயும் பங்கு பெறுகிறோம். நாம விசுவாசப் பிரமாணத்தை அறிக்கையிடுகிறதினால், நாம் எல்லோரும் ஒரே விசுவாசமும், நம்பிக்கையும் ஒரே இருதயமும், ஒரே ஆத்துமாவும் ஒரே ஆவியின் ஒருமையினால், ஒரே சட்டத்தை பின்பற்றி அப்போஸ்தலருடைய போதகத்தில் நிலைத்திருந்து, உலகமெங்கிலும் பலவிதமாய் பிரிந்து இருந்தாலும், நம்முடைய விசுவாசப்பிரமாணம் நம்மை பரிசுத்தப்படுத்தி கிறிஸ்துவுக்குள் நம்மை ஒரே பரிசுத்த சபையாக மாற்றுகிறது.

அடேங்கப்பா! எனக்கு இன்னொரு சந்தேகம்! இந்த பாவ உலகத்தில இருக்கிற சபையை எப்படி பரிசுத்த சபை என்று சொல்ல முடியும்?

எப்பவுமே கிறிஸ்து பரிசுத்தர். நமது சபைக்கும் கிறிஸ்து தான் தலை, கிறிஸ்து அவருடைய சபையை அழைப்பு கொடுத்து, பரிசுத்த ஞானஸ்நானத்தை கொடுகின்ற அதிகாரம் கொடுத்ததினால், சபை பரிசுத்தமாக்கபடுகிறது. அதுமட்டுமில்லாமல் கிறிஸ்தவ சபை கிறிஸ்துவோட பரிசுத்த ஊழியத்தை செய்கிறது. எதிர்காலத்தில கிறிஸ்துவுடைய இந்த மணவாட்டி சபை பரிசுத்த ராஜ்யத்தில் சேர போகிறது. கிறிஸ்து பரிசுத்தராக இருக்கும் போது அவருடைய மணவாட்டியும் பரிசுத்தம் தானே.

சரி கிளாடிஸ் பொதுவான சபை என்று சொன்னியே பொதுவான என்றால் கத்தோலிக்க சபை என்று தானே அர்த்தம் ?

ஆமா, நீ சொன்னது சரிதான் கத்தோலிக் என்ற வார்த்தை கத்தோலிக்கோஸ் என்ற கிரேக்க வாரத்தையில் இருந்து வந்தது. ஆதி கிறிஸ்தவத்தில கிறிஸ்துவின் சபை கத்தோலிக்க சபை என்று தான் அழைக்கப்பட்டது. ஆதி கிறிஸ்தவ விசுவாசத்தை நாம் இன்னமும் பின்பற்றி வருகிறதினால நம்முடைய சபையும் கத்தோலிக்க சபை தானே?

அதெல்லாம் சரி, கடைசியாக நாம அப்போஸ்தல சபை-னு சொல்றோமே அதுக்கு என்ன அர்த்தம்?

கிறிஸ்து இயேசுவாகிய மூலை கல்லின் மீதும், அப்போஸ்தலர்களுடைய அஸ்திபாரத்தின் மேலும், அவர்களின் போதனைகளின் மேலும், ஆதியில் இருந்து அவர்கள் மீதும், அவர்களுக்கு பின் வந்த கிறிஸ்தவர்களின் மீதும் நம்முடைய சபை கட்டபட்டிருகிறது. அதற்கு தான் நாம நம்முடைய சபையை அப்போஸ்தல சபை-னு நம்முடைய விசுவாச பிரமாணத்துல அறிக்கை செய்கிறோம்

சூப்பர். நாம தினமும் சபையில ஏறெடுக்கிற விசுவாச பிரமாணத்திலே நம்ம சபைய பத்தி இவ்ளோ இருக்கா! இன்னும் நம்ம ஜெப புத்தகத்துல என்ன என்னலா இருக்கு!?

ஆமா கிளாட்வின். வா நாம தொடர்ந்து ஜெப புத்தகத்துல வேற என்ன என்னலா இருக்கு னு பாப்போம் !

...தொடரும்

## நற்செய்தியில் சபையார்





1860 ஆம் ஆண்டு மே மாதம் 31 ஆம் தேதி இராஜபாளையத்தில் நடைபெற இந்த ஆன்மீக மறுமலர்ச்சியை இச்சபையின் குருவானவர் சத்தியநாதன் இவ்வாறு எழுதுகிறார். காலை 7 மணிக்கு ஆலயத்திற்குச் சென்ற பொழுது, உபதேசியார் தங்களை அழைக்காமலே சபைமக்கள் அனைவரும் ஆலய ஆராதனைக்கு வந்திருந்தார்கள். இதற்கு முன்பு, உபதேசியார் சபை மக்களை ஆலயத்திற்கு வரும்படியாய் மிகவும் வருந்தி அழைத்தாலும், சபை மக்களில் ஒரு பகுதியினரே ஆலய ஆராதனையில் பங்கு கொள்வார்கள். இப்பொழுதோ எவ்வளவு பெரிய வித்தியாசம். தங்கள் கூட்டிற்கு வந்தடையும் புறாக்களைப் போல மிகத் துரிதமாக மூன்று கிராமத்தைச் சேர்ந்தவர்களும் ஆலய ஆராதனைக்கு வந்திருந்தார்கள். சபையாரில் ஒருவர் சொன்னார், “நாம் ஆராதனையைச் சீக்கிரம் முடித்து விட்டு நற்செய்தி அறிவிக்கச் செல்லவேண்டும். ஏனென்றால், அறுவடையோ மிக அதிகம், வேலையாட்களோ மிகக் கொஞ்சம்” என்றார்.

# அருட்திரு எஸ் வேதமுத்து

அருட்திரு. பேராசிரியர். மா. தேவராஜ்,
கூடலூர், நீலகிரி

அருட்திரு எஸ். வேதமுத்து (Rev. S. Vedamuthu) அவர்கள் நீலகிரி மலையில் ஐம்பது ஆண்டுகள் அயராது ஆண்டவருக்காக உழைத்தவர். இவரது வாழ்க்கை வரலாறு இன்றைய இளைய தலைமுறையினருக்கு சவாலாகவும், பயனாகவும் இருக்கும் வகையில் இங்கு நான் தொகுத்திருக்கின்றேன்.

திரு எஸ்.வேதமுத்து அவர்கள் திருநெல்வேலியைச் சேர்ந்தவர். (இவரது திருநெல்வேலி பூர்வீகம் எனக்கு தெரியவில்லை) இவரது தகப்பனார் அருட்திரு ஜீ. சுவாமியடியான் (Rev.G.Swamiadian) அவர்கள் திருநெல்வேலி சி.எம்.எஸ்ஸின் (C.M.S) சார்பாக நீலகிரி (The Nilgiris) மலைக்கு அனுப்பப்பட்டு, உதகமண்டல (Oo-t acamund) சி.எம்.எஸ்ஸின்

**வேதமுத்து ஐயர் ஏறாத (நுழையாத) வீடுகளோ, குடிசைகளோ ஒன்றும் கிடையாது**

திருப்பணியில் 1892ஆம் ஆண்டு நவம்பர் மாதம் இணைந்தார், இவர் சி.எம் எஸ்ஸின் உதகமண்டல தமிழ் திருப்பணிகளை 1892 முதல் 1902 வரை பத்தாண்டுகள் தூய திரித்துவ தேவாலயத்தின் (Holy Trinity Church) போதகராக இருந்து நிறைவேற்றினார்.

1892ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் திரு.எஸ்.வேதமுத்து அவர்கள் திருநெல்வேலியிலிருந்து தொடர்வண்டியில் மேட்டுப்பாளையம் வந்து சேர்ந்து, பின்னர் அங்கிருந்து குன்னூருக்கு கால்நடையாக நடந்து,அன்று இரவு குன்னூரில் இரவுப் பொழுதைக் கழித்து, மறுநாள் காலையில் உதகமண்டலம் சென்று தகப்பனாருடன் இணைந்தார். (இவரது இந்தப் பயணத்தை இப்போது நான் நினைத்தால் எனக்கு தலைச் சுற்றுகிறது அவ்வளவு கடினமாக பாதை, இடம், காட்டு விலங்குகள்!!)

1893 ஆம் ஆண்டு ஜெனனா அருட்பணி சங்கம் (Church of England Zenana Mission) உதகமண்டல நகரத்தில் ஹோபார்ட் பெண்கள் பள்ளியை (Hobart's girl's School) தொடங்கியிருந்தது. இப்பள்ளி கோடை விடுமுறைக்குப் பின்னர் ஜீன் மாதம் திறக்கப்பட்டப்போது அப்பள்ளியில் ஆசிரியராக 1904ஆம் ஆண்டு இறுதி வரை பணியாற்றினார்.

1904ஆம் ஆண்டு இறுதியில் அருட்திரு. எ.எச்.லாஷ் (A.H.Lash) அவர்கள் இவரை சென்னை (Madras) இராயப்பேட்டையில் (Royapet) உள்ள சிஎம்எஸ் தேவியல் பள்ளிக்கு (C.M.S Divinity School) இறையியல் (Theology) கற்க அனுப்பினார். இரண்டாண்டு இறையியல் பயிற்சியை சிறப்புடன் நிறைவு செய்து, 1906ஆம் ஆண்டு இறுதியில் உதகமண்டலம் வந்துச் சேர்ந்தார்.
1906ஆம் ஆண்டு உதகமண்டலம் வந்து சேர்ந்தவுடன் திருச்சபையின் திருப்பணிகளை பொறுப்பெடுத்தார். உதகமண்டலம் தூய தோமா தேவாலயத்தில் (St.Thomas Church) சென்னை பேராயர் (Bishop of Madras) பேரருட்திரு வொயிட்ஹெட் (Rt.Rev.Whitehead) அவர்களால் 1907ஆம் ஆண்டு டீக்கனாகவும் (Deacon) 1909 ஆம் ஆண்டு குருவானவராகவும் (Priest) அருட்பொழிவுப் (Ordained) பெற்றார்.

அருட்திரு. எ.எச். லாஷ் அவர்கள் 1907ஆம் ஆண்டு பணி ஓய்வுப் பெற்றதை அடுத்து அருட்திரு எ.என்.சி. ஸ்டோர்ஸ் (Rev.A.N.C.Stores) அவர்கள் திருநெல்வேலி அருட்பணிதளத்திலிருந்து உதகமண்டலம் வந்து சேர்ந்தார். அவரைத் தொடர்ந்து 1910ஆம் ஆண்டு முதல் அருட்திரு (பின்நாட்களில் கானோன்) எச். ஏ. டீ. மோர்ஹவுஸ் (Rev. ( lately Canon) H.A.D.Moorhouse) அவர்கள் 1937வரை கூடலூர் உட்பட நீலகிரி மாவட்டம் முழுதும், மற்றும் வயநாடுப் பகுதிகளில் (Nilgiris and Wynaad) அருட்பணி கண்காணிப்பாளர் (Superintending Missionary) அருட்பணியாற்றும் போது அவர்களுடன் இணைந்து திருப்பணியாற்றிட வாய்ப்பு பெற்றார்.

1907ஆம் ஆண்டு திருச்சபையின் பொறுப்பை எடுக்கும் போது சுமார் 400 உறுப்பினர்கள் இருந்தனர், பொருளாதாரத்திற்காக அருட்பணி சங்கத்தின் தலைமையகத்தைச் சார்ந்திருக்க வேண்டியிருந்தது. இவரோ இளம் வாலிபராக துடுக்குடன் நற்செய்தி பரப்பும் பணியில் அதிகமாக மாவட்டம் முழுதும் ஈடுபாடுக் கொண்டார். இதன் விளைவாக திருச்சபையிகன் அங்கத்தினர்களின் எண்ணிக்கை1937ஆம்ஆண்டுஆயரவர்கள் ஓய்வுபெறும்போது உதகமண்டலத்தில் திருச்சபை உறுப்பினர்கள் எண்ணிக்கை 1500 தாண்டியது, 500க்கு அதிகமானவர்கள் பல்வேறு கிளை பணிதளங்களான நடுவட்டம் (Naduvattam), பைக்காரா (Pykarah), கோத்தகிரி (Kotagiri), மற்றும் கீழ் கோத்தகிரி (Kil Kotagiri) போன்ற இடங்களில் இருந்தனர். திருச்சபையின் உறுப்பினர்கள் பலர் திருச்சபையின் பொருளாதாரதை தற்சார்பு நிலைக்குக் கொண்டுவர அவரோடுப் பாடுப்பட்டனர் எனில் அது மிகையல்ல.

குருசேகரத்தின் திருப்பணியின் மத்தியில் வடக்கு தெற்கு வயநாடு மாவட்டங்களில் (இன்றைய கேரளா மாநிலத்திலுள்ள இடங்களில்) தங்கியிருந்து (என் வாசகர்களுக்கு இப்பகுதிகள் பரிச்சயமானால் மானந்தவாடி, சுல்தான் பத்தேரி,

மேப்பாடி போன்ற இடங்கள்) அப்பகுதிகளில் அந்நாட்களில் திருப்பணியாளர்கள் இல்லாததால் ஆண்டிற்கு ஒரு முறை சென்று, ஆறு மாதம் அப்பகுதிகளில் முகாமிட்டு அங்கு தேயிலை தோட்டங்களில் வாழும் கிறிஸ்தவர்களின் திருமுழுக்கு (Baptism), திருவிருந்து (Holy Communion) மற்றும் திருமணம் (Marriages) போனற திருசெயல்களையும் சிறப்பு நற்செய்தி திருப்பணிகளையும் (Evangelizing), மக்களின்ஆவிக்குறியசெயல்களைகவனித்து வந்தார். (பல இடங்களுக்கு அந்நாட்களில் சரியான போக்குவரத்து வசதிகள் என்பதேக் கிடையாது, எனவே நடந்தேச் சென்று தமது திருப்பணியினை நிறைவேற்றினார். இந்த இடங்களுக்கு சில நேரங்களில் அடர்ந்த வனப் பகுதி வழியாக பயணிக்க வேண்டும்). ஒருமுறை சென்னை பேராயர் அவர்கள் இப்பகுதியில் உள்ள தேயிலைத் தோட்டங்களை சந்திக்க வந்து இங்குள்ள தேவைகளை உணர்ந்து கூடலூருக்கு (Gudalur) அருட்திரு சி. ஜான்சன் (Rev.C. Johnson) அவர்களையும், மானந்தவாடிக்கு (Mananthoddy) அருட்திரு.ஏ.ஐசக் (Rev.A.Isaac) அவர்களையும் ஆயர்களாக நியமித்தார். இதனால் ஆயர் அவர்கள் வயநாடு பகுதிகளுக்குச் செல்லும் பளுவைக் குறைத்தது. இதற்கிடையே கோத்தகிரியின் திருப்பணியானது குன்னூர் திருச்சபையின் மேலாண்மையின் கீழ் வந்தது, இருப்பினும் சில நாட்களுக்குப் பின்னர் உதகமண்டல குருசேகரத்தின் (Ootacamund Pastorate) மேலாண்மைக்கு வந்தது. ஒரு நற்செய்தியாளர் நியமிக்கப்பட்டதால் கோத்தகிரியின் சுற்றுவட்டார திருப்பணி நல்ல வளர்சியைக் கண்டது. லவ்டேல் (Lovedale) லாரன்ஸ் பள்ளி (Lawrens School) வளாகத்திலிருந்த பரமேறின திருச்சபையில் (தேவாலயத்தில் The Church Of Ascension) ஆங்கில ஆராதனை மட்டுமே நடந்து வந்த நிலையில் தமிழ் திருப்பணி இவரது பெரும் முயற்சியால் தொடங்கப்பட்டு இன்றும் செயல்ட்டு வருகின்றது.




சுமார் இருபத்தேழு வருட திருப்பணியின் இறுதியில் திருப்பணியை சிறப்பாக கொண்டுச் செல்ல ஒரு உதவி ஆயரின் தேவையை உணர்ந்து, பேராயர் வாலர் (Rt.Rev. Waller) அவர்களிடம் கேட்டுக் கொண்டதற்கு இணங்க அருட்திரு மில்ஸ் (Rev.I.S.Mills) அவர்கள் நியமிக்கப்பட்டார், 1936ஆம் ஆண்டு அருட்திரு மில்ஸ் அவர்களுக்கு பதிலாக அருட்திரு ஜி. ஒய். டக்கர் (Rev.G.Y.Tucker) அவர்களை பேராயர் அனுப்பினார். 1937 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31ஆம் தேதி அன்று அருட்திரு ஜி. ஒய். டக்கர் (Rev.G.Y.Tucker) அவர்களிடம் தன் பொறுப்புகளை ஒப்புவித்து தம் திருபணியிலிருந்து அலுவல் ரீதியாக ஓய்வுப் பெற்றார்.

லவ்டேல் (Lovedale) லாரன்ஸ் பள்ளியின் (Lawrence School) முதல்வர் அருட்திரு சி. பி. ஹால் (Rev.C.B.Hall) அவர்கள் அந்தப் பகுதியில் உள்ள சிதறியிருக்கின்ற இந்திய திருச்சபை மக்களை மேய்பதற்கும், இந்திய ஞாயிறுப் பள்ளியை கண்காணிக்கவும் தமக்கு ஐரோப்பிய சேவையில் உதவி தேவைப்படும் போது உதவிப் பெறவும் ஒரு ஓய்வுப் பெற்ற ஆயர் தேவை என உணர்ந்து ஆயரின் உதவியைப் பெற்று 1938 ஆம் ஆண்டு முதல் 1943ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 24ஆம் தேதி வரை பள்ளி நிர்வாகத்தின் கீழ் திருப்பணியாற்றினார். அன்றோடு ஆயரின் அருட்பணியில் ஐம்பது ஆண்டுகள் நிறைவுற்றது. தூய திரித்துவ தேவாலய சிறப்பிதழ் ஒன்றில் இவரைப் பற்றி அதன் ஆசிரியர் கூறுகையில் ‘இவர் ஏறாத (நுழையாத) வீடுகளோ, குடிசைகளோ ஒன்றும் கிடையாது’. என சிறப்பித்துள்ளார். இக்காலகட்டங்களில் இவர் நற்செய்தி பணிக்கு தம் முழு கவனத்தையும் செலுத்தினார் எனில் அது மிகையன்று.

# How Christianity came into India

Rev. John Manickavasagam. (1926)

மத்தியகாலம் என்று அழைக்கப்படுகிற 14-ம் நூற்றாண்டில் ரோம கிறிஸ்தவ மார்க்கத்தில் ஏராளமான புதிய சங்கங்கள் துவங்கப்பட்டு, புதியவிதமான ஆவிக்குரிய முயற்சிகள் நடைபெற்றன. மார்க்கோ போலோ (Marco Polo) என்ற வெனிஸ் நாட்டு வரலாற்று ஆய்வாளர் 1295-ம் வருஷத்தில் இந்தியாவில் சுற்றுபயணம் பண்ணுகிற காலத்தில், தான் மலபார் என்னுமிடத்தில் கிறிஸ்தவர்களைக் கண்டதாகவும் பரி, தோமாவின் கோவிலில் ஆச்சரியமான அற்புதங்கள் நடைபெறுவனவாகவும், தோமா அப்போஸ்தலன் இந்தியாவில் மரித்ததாகவுஞ்சொல்லுகிறான்.

ரோம கிறிஸ்தவ மார்க்க கிறிஸ்தவர்களில் இரண்டு சங்கங்களிருந்தன. அவர்களை பிரான்சிஸ்க்கன்ஸ் (Franeans) டாமினிசியன்ஸ் (Dominicians) என்று முறையே அழைத்தனர். இவர்கள் 1319-ம் வருஷத்தில் போப் (pope) அதிகாரத்துக்கு எல்லாக் கிறிஸ்தவர்களையும் கொண்டு வரவும், ரோம போப்பின் இராஜரீக அதிகாரத்துக்குள் மற்ற இராஜியங்களைக் கொண்டுவரவும், கிழக்குத் தேசங்களுக்குப் புறப்பட்டனர். இந்தியாவிலும், சீனதேசத்திலும் இவர்கள் வேலை செய்ய ஆரம்பித்தனர். டாமினி சியன்ஸ் சங்கத்தைச் சேர்ந்த ஜாட்டேனஸ் (Jordanuz) என்பவன் தற்போதைய மும்பை பட்டணத்தில் வந்திறங்கி, இரண்டு வருஷம் இந்தியாவில் காத்திருந்து, மலபாரிலிருந்த திருச்சபையைச் சந்தித்தான். இந்த ஜாடேனஸ் போப்வுக்கு எழுதின கடிதத்தில் மலபாரிலிருந்த கிறிஸ்தவகளின் நம்பிக்கையைப்பற்றி யெழுதியிருக்கிறான். எல்லாக்கிறிஸ்தவர்க்கும் - சரியானபடி கல்வியில்லாமலும், அநேகர் ஞானஸ்நானம் பெறாமலும், பரி. தோமாவையே, மேசியா இரட்சகர் என்றும் விசுவாசித்தும் வந்தார்களென்று சொல்லுகிறான். ஆனதால், அக்காலத்தில் அதாவது 14-ம் நூற்றண்டில் திருவாங்கூர் ஆளுகையிலிருந்த கிறிஸ்தவர்கள் குறைவாயும், செல்வாக்கில்லாதவர்களும், ஒருவாறு வீழ்ச்சி அடைந்தவர்களாயும் இருந்தார்களென்றும் தெரியவருகிறது.

ஆனால் 16-ம் நூற்றாண்டில் வித்தியாசமான சில புதிய விஷயங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. புதுமையானதேசங்களும், கடல்பாதைகளும் கண்டுபிடிக்கப்பட்டன. இத்துடன் மிஷனெரி, ஊழியமும்சேர்ந்து கொண்டது. எங்கெல்லாம் ஐரோப்பாவிலிருந்து வர்த்தகமும் சேனையும் வந்து இறங்கினார்களோ, அங்கேயெல்லாம் கிறிஸ்தவ குருக்களும், அத்தியக்ஷனரும் வந்திறங்கினர். இந்தியாவிற்கு வியாபாரத்திற்காக முதலாவது வந்த ஐரோப்பிய நாட்டினர் போர்ச்சுக்கீசியர்கள்.

இவர்கள் 16-ம் நூற்றாண்டில் ரோம இராஜியத்தை பரப்புவதற்க்கு மிகுந்த உதவி செய்கிறவர்களாயிருந்தனர். கோவா என்னுமிடத்தில் ரோம கத்தோலிக்க பேராயம் எற்படுத்தப்பட்டு, அநேக கிறிஸ்தவர்களும் புதிதாய்ச் சேர்க்கப்பட்டனர். கடைசியாக இந்த ரோம மார்க்க அத்தியக்ஷர்கள் திருவாங்கூரிலிருந்த மார் தோமா (Mar Thoma) கிறிஸ்தவர்களையும் தங்களுடன் சேரவும், போப்பானவரையே திருச்சபைக்குத் தலைவராகப் ஏற்படுத்த வேண்டுமென்று பல்வேறு முயற்சிகள் எடுத்தனர். இம்முயற்சிகளில் ரோமன் கத்தோலிக்க மார்க்கத்தாருக்கு முழுவெற்றி கிடைக்கவில்லை.



இக்கினாசியஸ் லையோலா

இதே காலத்தில் இயேசுவின் சங்கம் என்று அழைக்கப்படும் ஜெருட் சங்கம் 1534-ம் வருஷத்தில் இக்கினாசியஸ் லையோலா (Ignatius Loyola) என்பவராலும், பரி, பிரான்ஸிஸ் சவேரியார் (St.Francis Xavier) என்பவராலும் ஏற்படுத்தபட்டது. 1541-ம் வருஷத்தில் போர்ச்சுக்கீசிய நாட்டினரால் பரி, பிரான்ஸிஸ் சவரியார் கோவா பட்டணத்துக்கு ஆங்கில கவர்னரோடு இந்தியாவிற்க்கு அனுப்பப்பட்டார். இந்தப் பரி. சவேரியார் கல்வியின் சிறந்தும், நற்குணத்தால் உன்னத நிலையுமடைந்தவர். இவருக்கு ஆவிக்குரிய ஆத்மீக பலத்தோடு அரசாங்க உதவியுமிருந்தது. பரி. சவேரியாருடைய ஊழியம் ஒருவாறு அவருடைய அரசாங்க தொடர்பால் தடைப் பட்டதென்றே சொல்லலாம். மேலும் இவ்வித விசுவாசி சில வேளைகளில் போர்ச்சுக்கீசிய கவர்னருடைய உதவியையும், ஆதரவையும் எதிர்பார்த்தது நமக்கு வேற்றுமையாயிருக்கிறது. ஆனால் பரி, சவரியார் பரிசுத்தவானாயிருந்த போதிலும், அவருடைய காலத்திலிருந்த கொள்கைகளை அவர் ஏற்றுக்கொண்டு இருந்தார் என்று நம்பி ஆக வேண்டுயுள்ளது. பரி. சவேரியாரால் ஒருவாறு பரதகுலத்தவர்களில் பெரும்பாலோர் கிறிஸ்து மதத்தைத் ஏற்றுக்கொண்டார்கள் என்றே சொல்ல வேண்டும். இவ்வித சுவிசேஷ ஊழியஞ்செய்துவந்த பரி. சவேரியாருக்குத்

தமிழ் மொழி தெரியாது என்று நாம் நினைக்கின்ற போது நமக்கு ஆச்சரியம் ஏற்படுகின்றது. ஆகையினால் அவர் தமது ஊழியத்தை எவ்வாறு நடத்தினார் என்று அறிவது உத்தமம். பரி. சவேரியார் ஒரு மணியைக் இசைத்து கொண்டு போவாராம். அதைக் கேட்டு அநேக மக்களும், பிள்ளைகளும் ஒன்றாய் வந்து கூடுவார்களாம். அப்பொழுது பரி. சவேரியார் தன் தாய்மொழியில் பேச மற்றொரு உதவியாளர் அதை தமிழ் மொழிப்படுத்தி இவ்விதமாகச் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தாராம். கூட்டம் கூட்டமாக அநேக ஜனங்கள் சரியான உபதேச அறிவில்லாமலே கிறிஸ்து மார்க்கத்தில் ஞானஸ்நானம் பெற்று இணைந்து இருக்கின்றார்கள். அது மட்டும் இல்லாமல் பரத குலத்தவர்களுக்கு அந்த காலத்தில் பிற மதத்தவரால் கஷ்டங்களும் துன்பங்களும் ஏற்பட்ட பொழுது, இவர்களுடைய உதவியினால் பரி. சவேரியார் மற்றும் போர்ச்சுக்கீசிய கவர்னரின் உதவியால் இந்த மக்களை மீட்டு இரட்சித்த, இந்த நன்றிக்காக பரதகுலத்தவர்கள் முழுவதுமாக கிறிஸ்து மார்க்கத்தை தழுவினார்களாம்.



பிரான்ஸிஸ் சவேரியார்

பரி, சவேரியாருக்கு விக்கிர ஆராதனையின்மேல் அதிக வெறுப்பிருந்ததினால், இந்தியாவில் இந்த விக்கிரகங்களை உருவாக்கியவர்களை போர்ச்சுக்கீசிய, அதிகாரிகளை கொண்டு கண்டித்தாராம். இன்னும் கள் முதலான போதை பொருட்களை செய்யக்கூடாதென்றும் அப்படிச் செய்கிறவர்களுக்கு அபராதமும், அதிகமாய்க் குடிக்கிறவர்களுக்குத் தண்டனையும் போர்ச்சுக்கீசிய அதிகாரிகள் மூலமாய்ச் கொடுத்தாராம். பரி. சவேரியார் நம்முடைய மாவட்டமான தூத்துக்குடியில் தான் முதலாவது ஊழியம் செய்தார். அந்த காலத்தில் போர்ச்சுக்கீசிய வியாபாரிகளுக்கு கடலுக்குள் இறங்கி முத்து எடுக்க உதவியாயிருக்கும்படி பரதகுலத்தவர்களைக் கிறிஸ்தவர்களாக்க, போர்ச்சுக்கீஸ் உத்தியோகஸ்தர்கள் பரி. சவேரியாரைக் கேட்டுக்கொண்டார்களாம். எனவே ஐரோப்பியர் கிறிஸ்து மதத்தைப் பிரசங்கிக்கும்போதும், தங்கள் முதல் நோக்கமாகிய வியாபார தந்திரத்தை ஒரு போதும் மறக்கவில்லை. கிறிஸ்து மார்க்கத்தின் மூலமாயும் தங்கள் தேசத்திற்கு பண வளங்களை கொண்டு செல்ல வேண்டும் என்ற முக்கிய நோக்கத்தை இக்காலத்திலும் எல்லா ஐரோப்பிய, அமெரிக்க மிஷனெரிமாரும் மறக்கவில்லையென்று நான் வெளிப்படையாக சொல்லவிரும்புகிறேன்.

பரி, பிரான்சிஸ் சவேரியார் தென் இந்தியாவிலும், திருவாங்கூரிலும் அதிகமான கிறிஸ்தவர்களைச் இணைத்ததாக வரலாறு நமக்கு தருகின்றது. திருவாங்கூர் எல்லைக்குள் ஓர் மாதத்தில் 10,000 பிற மதத்தவர்களை கிறிஸ்துமதத்திற்குக் கொண்டுவந்து, ஞானஸ்நானங் கொடுத்ததாகச் சொல்லியிருக்கிறது. மன்னார் என்ற இடத்திலும், மதுரை மாவட்டத்திலும் பரி, சவேரியார் அநேக மக்களை கிறிஸ்தவர்களாக்கினார். இந்தப் பரிசுத்தவான் இந்தியாவில் மூன்று வருடம் மட்டுமே உழைத்தார். அதன் பின்பு ஜப்பானிலும், மண்டெலேயிலும் உழைத்து, ஜுரத்தில் சான்சியன் (Sancian) என்ற தீவில் இறந்தார். இவருக்குப்பின் இன்னும் அநேக கிறிஸ்தவ மிஷனெரிமார் இந்தியாவிற்கு வந்து, கிறிஸ்துமதத்தைப் பிரசங்கித்தனர். இவர்கள் செய்தவேலையில் மிக முக்கியமானது கல்வி. இந்தியாவில் கல்வியை பெருக செய்யும் பொருட்டு கிறிஸ்தவ மிஷனெரிகள் கொடுத்துள்ள விலைகிரையம் விலைமதிக்கமுடியாத பொக்கிஷம். இந்த மிஷனெரிகளில் சிறந்தவர்கள் ராபர்ட் டீ நோபிலி (Robert De Nobili) பெஸ்கி (Beschi) என்னும் வீரமாமுனிவர்.

---

## கீர்த்தனைகளின் தோற்றமும் வளர்ச்சியும்

TCHSPortal.com

கீர்த்தி என்னும் அடிப்படை சொல்லில் இருந்து உருவானதே கீர்த்தனை என்னும் சொல். கீர்த்தனை என்பதற்கு புகழ் என்பது பொருள், அதாவது ஒருவரின் புகழை பாடுதல் அல்லது பெருமை பாடுதல் என்று பொருளின் அடிப்படையில் தோன்றியதே கீர்த்தனை.

தொல் காலம் முதற்கொண்டு இந்த புகழ் பாடும் வழக்கம் இருந்துள்ளது. சங்க காலம் சங்கம் மருவிய காலத்தில் வழக்கில் இருந்த இசைப்பாடல் தேம்பாவணி என்று அழைக்கப்பட்டது. இது முகனிலை, கொச்சகம், முரி என்று மூன்று பகுதிகளை கொண்டுள்ளது. அதுவே நாம் இப்பொது பல்லவி, அனுபல்லவி, சரணம் என்று கீர்த்தனைகளின் உறுப்புகளாக பரிணாமித்துளது என்பது அறிஞர்களின் கருத்து. பல பிற மதத்தவரின் இலக்கிய இசைகளில் காலம் காலமாக கீதம் என்னும் வாக்கியம் பயன்படுத்தப்பட்டுள்ளது.

கீர்த்தனைகள் என்பதின் ஆழமான அர்த்தங்களை நாம் புரிந்து கொண்டால் நாம் தற்போது படிக்கும் கீர்த்தனைபாடல்களின் மகத்துவங்களை அறிந்து கொள்ளலாம்.

கீர்த்தனைகள் என்பன இசை, தாளத்துடன் பாடக்கூடிய பாடல்களாகும்.

கீர்த்தனைகள் சமுதாய மாற்றத்திற்கு வழிவகுக்கும் ஓர் உணர்வுமிக்க பாடல்களாகும்.

கீர்த்தனைகள் பெரும்பாலும் முதலானவனை போற்றியே பாடக்கூடியதாக இருந்துள்ளது.

உணர்ச்சி மிக்க அதே நேரத்தில் மகிழ்ச்சி களிப்புடன் கீர்த்தனைகள் பாடக்கூடியன.

# மாணவர் நற்செய்தி முகாம்

அருள்திரு லாசரஸ் செல்வநாதன்,
வேலூர் காட்பாடி



**செ**ப்டம்பர் என்றாலே மாணவர்களுக்குத் தேர்வு நினைவுக்கு வரும். மிஷனெரி, ஊழியர், உபதேசி என கிறிஸ்தவர்களுக்கு சுவிஷேசப்பணி நினைவுக்கு வரும். வாழ்நாளெல்லாம் இப்பணியாற்றினும் இம்மாதம் இப்பணிக்கு சிறந்ததாகும். தென்தமிழ்நாட்டின் வரலாறு எவரும் அறிந்ததே. இன்றைய வேலூர் பேராயத்தின் (16 குருசேகரங்கள்) சேர்ந்து 'தென்வட்டார மாணவர் சுவிஷேசப் பயிற்சி முகாம் (10-20 வயது) 82 வருடங்களாக கோடை விடுமுறையில் நடந்துவருகிறது. (இவ்வாண்டு தவிர) ஆண்டுதோறும் ஒரு கிராமத்தில் 40 மாணவர்கள் தொடர்ந்து 10 நாட்கள் மரத்தடியில் தங்கி தினமும் காலையிலும், மாலையிலும் சுவிஷேசத்தை அருகிலுள்ள கிராமங்களிலும், பகலில் கிராம சுகாதாரப்பணி (தெருசுத்தம், கிணறு தூர்வாரல், சிறுவர்களைக் குளிப்பாட்டி அவர்கள் துணிகளை துவைத்து, முடிவெட்டி, உடுத்தி, திண்பண்டங்கள் வாங்கிக்கொடுத்து, பாடல் கற்பித்து, வசனம் சொல்லிக்கொடுத்து, கதைகள்(நற்செய்தி) கூறி ஜெபித்து அனுப்புவோம். கிணறும், பிள்ளைகளும் சுத்தமாவதைக் கண்டு இம்மக்கள் எங்களை விரும்பி எங்கள் மாலை நற்செய்திப் பணியை ஏற்பார்கள். பகலில் உணவிற்குப்பின் ஓய்வும், பின் பாடப்பயிற்சி, வேதபாடம், போதகர், உபதேசி மூலம் நடைபெறும்.

விடுதி போன்று சட்டத்திட்டங்கள் இம்மக்களுக்குச் செல்கையில் புத்தகங்கள், விளக்கு, இசைக்கருவிகள் இவற்றை சுமந்து பல இடங்களுக்கு செல்வது மாணவர்களுக்கு கஷ்டமே. எங்கள் உணவை நாங்களே விறகு சேகரித்து, சமைத்து, பகிரவும், பாத்திரங்கள் சுத்தப்படுத்தவும் பழகினோம். 25-ம் வருடம் என் தலைமையில் வெள்ளிவிழா நடத்தினேன். 10 நாள் உணவு கட்டணம் ஒரு ரூபாய் மட்டுமே அல்லது ஒருபடி அரிசி. வறுமையில் பெருமையுடன் பயின்றோம். கழிப்பிடம் குளியலறையின்றி கிணற்றில் குளித்து மகிழ்ந்தோம். மாலையில் மீண்டும் நடுத்தெரு நற்செய்தி காலட்சேபம், இசை என மக்களைச் சேர்க்கையில் பல இடங்களில் எதிர்ப்பும், அடிதடியும் உண்டு. தெருவில் யார் பிரசங்கம் செய்யவேண்டுமென அப்போதுதான் அறிவிக்கப்படும். பயத்துடனும், நடுக்கத்துடனும் முன்னனுபவமின்றியும் இப்பணிக்கு எங்களை வழிநடத்திய கர்த்தர், இன்று இப்பயிற்சியில், பலர் ஊழியர்களாக, உபதேசிகளாக, குருவானவர்களாக பணியாற்ற உதவி வருவதும் பெருமையே!



# சரணாகதி அடைதல்

சந்தியாகு ஐயர் இலக்கணப் புலமை நிரம்பியவர் என்பதை அவரது பாடல்கள் உணர்த்தும். அவ்வாறே அவர் இறைப்பற்று கொண்டு இறைவனிடம் தம்மை முற்றிலும் ஒப்படைத்து விடுகிறார். 'ஏசுவே இந்த நேரமே நான் என்னை உம்மிடம் தந்துவிட்டேன். இனி நான் அல்ல; நீரே எனக்குள் வாழ்கிறீர், உந்தன் சித்தமே அன்றி இனி என் சித்தத்தை ஒழித்துவிடுவேன். நானே ஒன்றுமில்லை உம்மாலன்றி ஒன்றும் செய்யேன்' எனப் பாடுகிறார்.

அப்பாடல் பின்வருமாறு,

பல்லவி

தந்தேன் என்னை யேசுவே,
இந்த நேரமே உமக்கே.

அனுபல்லவி

உந்தனுக்கு ஊழியஞ்செய்யத்
தந்தேன் என்னைத் தாங்கியருளும்
! - தந்தேன்

சரணங்கள்

3 . உந்தன் சித்தமே செய்வேன்,
எந்தன் சித்தம் ஒழித்திடுவேன்
எந்த இடம் எனக்குக் காட்டினும்
யேசுவே , அங்கே இதோ போகிறேன் 2 -
தந்தேன்

இந்தப் பாடலைச் சந்தியாகு ஐயா எழுதுவதற்கு ஏசுநாதர் வாழ்வில் நடந்த நிகழ்வு ஒன்று உந்துதலாய் இருந்திருக்கும். ஆண்டவராகிய ஏசு ஒலிவ மலைக்குப் போய் முழங்கால்படியிட்டு, 'பிதாவே உமக்குச் சித்தமானால் இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும். ஆயினும் என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆக்கக்கடவது என்று ஜெபம் பண்ணினார்'. விவிலியத்தில் அறியலாகும் மிகவும் சிறப்பான ஜெபம் இதுவேயாகும் என்பர்.

# செப்டம்பர் மாதம் பிறந்த நாள் கொண்டாடும் மிசனரிகள், பாடலாசிரியர்கள்,குருவானவர்கள்

Yesudian Gnanaprakasm
John Samuel
William Arthur Sironmani
Charles Franklin
Masillamani Daniel Jousua
Christian Pohle
Sadhu Sundar Singh
Aiyadurai Jesudasen Appasamy
John Scudder Sr
Santhosham Vethanayagam
Samuel Vedamanikkam Devadosan
John Christian Visuvasam
Vedanayagam Sastriar
Gnanapragasam Paranjothi
John Ernest Langley Forst
John Arulananthan
John Devasagayam Manikkavasagam
Gilbert Henry Lamp
Jacob Joseph

Peter Fjellstedt
William brawn Addis
Arulinandam Samuel
N. Samuel
Aralappan Devadas
Charles Egbert Kennet
Savarimuthu Madurendram Devadas
Kermode Bhugranadan Arulanadam
Diraviam Kovilpilai
Frederick Gell
Isaac Gurubatham
David John Devapiriam
Ceeil William Frederick Bennaet
Johann Georg Ferdinand Müller George Müller
George Yeats Heyne
David Abraham
Suviseshmuthu David Devapriyam
Thomas Samuel Garret

## செப்டம்பர் மாதம் நினைவு நாளை ஆசரிக்கும் மிசனரிகள், பாடலாசிரியர்கள்,குருவானவர்கள்

Thomas Adamson
Augustus Frederick Caemmerer
Henry Bower
Rajanayagsm Vedanayagam Asirvadam
John Simeon
Daniel James
Mother Teresa
John samuuel
Samuel VedamanikkamDevadasan
Samuel Jaganathan
William Pascal Schaffter
Josudusan Devassgayama Samuel
Robert Sinclair
William Gray

John Samuel
James Sratt
Stephen Paramandam
Gnanamuthu Swamiadian
Joseph manuel
Pakkthsing
Thomas Philp Adlphus
Daniel Joseph
Ambrose Vedanayagam Thomas
John Thomas Tucker
Sinnakannu Suviseshamuthu
Manikkam Gnadas
Sargunam Sathiandan

வடதிருநேல்வேலி வரலாற்றிலிருந்து...

ராக்லாண்ட் ஐயரின்

# நற்செய்தி அறிவிக்கும் உத்திகள்

மிகுந்த கலைநயத்தோடு கட்டப்பட்டு பழமை மாறாமல் இன்றும் புதுப்பிக்கப்பட்டு, உலகின் ஆகச் சிறந்த ஆசிரியர்களை தன்னகத்தே கொண்டு மிகச் சிறந்த மாணவர்களை, ஆராய்ச்சியாளர்களை விஞ்ஞானிகளை உருவாக்குவதில் கேம்பிரிட்ஜ் பல்கலைகழகம் இன்றும் தனித்தே நிற்கிறது! அப்படிப்பட்ட பல்கலைக்கழகத்தின் தலைசிறந்த கணித மாணவராக இருந்து படிப்பில் தலைசிறந்து, பரிசுகள் பல பெற்று, பின்பு ஆசிரியராக தகுதி அடைந்து, ஒரு விஞ்ஞானி ஆவதற்கு அனைத்து தகுதிகளையும் பெற்று விட்டபின், அவைகள் அனைத்தையும் துறந்து விட்டு, பனைகளும் பாறைகளும் உறைந்து கிடக்கும் இந்த மண்ணை நோக்கி ஒருவர் வந்தார் எனில் உலகம் அதற்கு என்ன பெயரை கொடுக்கும்?



நற்செய்தி அறிவிப்புப் பணியில் தொப்பியில் கூழ் வாங்கி குடித்தவர் என்ற ஒற்றை வரியில் மட்டுமே ராக்லாண்ட் என்னும் மாபெரும் மேதையை அடையாளப்படுத்துவது அவ்வளவு சரியல்ல! வட நெல்லை அப்போஸ்தலன் என்று அழைக்கப்படும் அளவிற்கு ஆயிரத்துக்கும் அதிகமான கிராமங்களில் நற்செய்தி அறிவிப்பு பணியை, கடும் எதிர்ப்புகளுக்கு மத்தியில் சுடும் மணற்பரப்புகளின் மேல் நின்று கொண்டு, கொடும் மனிதர்களுக்கு இதயத்தில் படும்படியாக சொன்னவர்! சமுதாயத்தில் ஆகத்தாழ்ந்த மனிதர்களுக்கு கொடுக்கப்படும் சிறு இரக்கம் கூட பல இடங்களில் அவருக்கு காட்டப்படவில்லை! சாணியை கரைத்து ஊற்றியது, உலக்கையை வைத்து அடித்தது, கல்லெறிந்து விரட்டியது என ஒரு நாயைப் போல நடத்தப்பட்டவர்! ஆனால் பொறுமையாக தான் வந்த நோக்கத்தை நிறைவேற்றினார்! இன்று வட நெல்லையின் வறண்ட பகுதிகள் கொஞ்சமேனும் சுவிசேஷ சுடரொளி வீசுகிறது என்றால் அதை பற்ற வைத்தவர் ராக்லாண்ட் வட திருநெல்வேலி பகுதியில் நற்செய்தி பணிக்காக அவர் கையாண்ட யுக்திகள்...

**சுற்றித் திரிந்து நற்செய்திப் பணியாற்றும் முறை:**

1853 ஆம் ஆண்டில் ராக்லாண்ட் இந்தியாவிலிருந்து இங்கிலாந்து நாட்டிற்குச் சென்ற பொழுது தன்னுடைய சென்னை CMS கழகத் தொடர்புச் செயலர் பதவியிலிருந்து தன்னை வடதிருநெல்வேலிப் பகுதியில் சுற்றித் திரிந்து நற்செய்திப் பணியாற்றும் முறைக்கென்று விடுவிக்குமாறு விண்ணப்பித்துச் சென்றார். அவருடைய வேண்டுகோளுக்கிணங்க வடதிருநெல்வேலி ஊழியத்துக்கெனச் செயலர் பதவியிலிருந்து விடுவிக்கப்பட்டார். 1853 ஆம் ஆண்டின் இறுதியில் மீண்டும் இந்தியாவிற்கு வந்த பொழுது வடதிருநெல்வேலியில் சுற்றித்திரிந்து நற்செய்திப் பணியாற்றும் முறையைச் செயல்படுத்த ஆரம்பித்தார். இந்த ஊழியத்தில் ராக்லாண்ட், ஃபென், மெடோஸ் என்ற மூன்று ஐரோப்பிய மிஷனரிகளும், வேதநாயகம், சத்தியநாதன், ஜோசப் கொர்நேலியு என்ற மூன்று இந்திய உபதேசியார்களும் பங்கு கொண்டனர். மேலும் தென்திருநெல்வேலியில் உபதேசியார்களாய்ப் பணி செய்து கொண்டிருந்தவர்களும், மிஷன் கல்வி நிறுவனங்களில் பணியாற்றிக் கொண்டிருந்தவர்களும் மாத விடுமுறை எடுத்து வடதிருநெல்வேலி ஊழியத்தில் பங்கு எடுத்தனர். இவர்களைத் தவிரப் பிற பணியில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டவர்களும் இவ்வூழியத்தில் தங்கள் செலவிலே பங்கெடுத்துக் கொண்டார்கள்.

**உரையாடல் மூலம் நற்செய்தி அறிவிக்கும் முறை:**

வடதிருநெல்வேலியில் 'சுற்றித் திரிந்து நற்செய்திப் பணியாற்றும் முறை' யின் சிறப்பு அம்சமே உரையாடல் மூலம் நற்செய்தி அறிவிக்கும் முறை ஆகும். உரையாடல் நடைபெற்ற இடங்கள், பொதுவாகத் தெருக்களின் முனைகள், கிராமச் சத்திரம் அல்லது சாவடி, மிஷனரிகள் தங்கியிருந்த கூடாரம் போன்றவையாகும். உரையாடல் பொதுவாக மிஷனரிகள் பிரசங்கம் செய்து முடித்தவுடன் நடைபெறும். அல்லது மக்களே மிஷனரிகளைக் கண்டவுடன் கேள்விக் கணைகளைத் தொடுப்பார்கள். உடனே உரையாடல் ஆரம்பமாகும். சில சமயங்களில் ராக்லாண்டே மக்களிடம் நேரடியாகச் உருவ வணக்கத்தைப் பற்றியும், மக்களுடைய பாவத்தைப் பற்றியும் கேள்வி கேட்பார். சில சமயங்களில் திருமறைக் கைப்பிரதிகளை அல்லது திருமறையில் உள்ள சில பகுதிகளைச் சத்தமாக வாசிப்பார். வாசித்து உரையாடல் ஆரம்பமாகும். உரையாடல் முறை பற்றி ராக்லாண்டே இவ்வாறு எழுதுகிறார். குறிப்பிட்ட இடத்திற்குச் சென்றவுடன், அங்கே கூடியிருந்த மக்களிடம் 10 நிமிடங்கள் நற்செய்தி அறிவித்துக் கொண்டிருந்தேன். பின்பு அங்கே கூடியிருந்தவர்கள் என்னைச் சாவடிக்கு அழைத்துச் சென்றார்கள் . ஒருவர், 'இங்கே உட்கார்' என்றார். நான் உட்கார்ந்து மனந்திரும்பிய இளைய குமாரனைப் பற்றிய உவமையை வாசித்தேன். 'அதை எனக்கு விளக்கிச் சொல் என்றார் ஒருவர். மிகுதியான மக்கள் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். இரண்டு மணி நேரம் அவர்களோடு உரையாடினேன்.

மேலும் கூறுகிறார்,

சாவடியில் மத்தேயு 5 - ம் அதிகாரத்தைச் சத்தமாய் வாசித்துக் கொண்டிருந்த பொழுது ஒரு மனிதர்

என்னிடம் வந்து, 'படிப்பதை நிறுத்தி, பாவம், நற்குணம் என்றால் எவை என்று சொல்' என்றார். நான் சில பாவங்களைக் கூறி, பத்துக் கற்பனைகளையும் அதன் கருக்க முறையையும் எடுத்துக் கூறினேன். நான் கூறிய எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்வதாகக் கூறினார்கள்.

இந்த உரையாடல்கள் மூலமாக வடதிருநெல்வேலி மக்கள் இயேசு கிறிஸ்துவைப் பற்றியும், திருமறையின் உண்மைகளைப் பற்றியும் அதிகம் அறிந்திருந்தார்கள். இந்த உரையாடல் நேரத்தில் மிகுதியான திருமறைக் கைப்பிரதிகள் மக்களுக்குக் கொடுக்கப்பட்டன. பொதுவாகப் பிராமணர்களும், சில நாயக்கர் இன மக்களும் மாத்திரமே திருமறையைப் பற்றிக் கேள்வி கேட்டார்கள். தாழ்ந்த ஜாதிக்காரர்கள் என்று தங்களை எண்ணிக் கொண்டிருந்தவர்களின் கேள்விகள் பொதுவாக அவர்களுடைய எளிமையான பொருளாதாரத்தைச் சார்ந்ததாயும், தங்களுடைய நடைமுறை வாழ்க்கையில் காணப்பட்ட ஜாதி பாகுபாடு, ஜாதிக் கொடுமைகளைப் பற்றியதாயும் இருந்தன. உரையாடல் நேரங்களில் மிஷனரிகளுடைய, குறிப்பாக ராக்லாண்டின் அடிப்படையான நோக்கம், வடதிருநெல்வேலி மக்களிடையே காணப்பட்ட உருவ வழிபாட்டைக் கண்டித்துப் பேசுவதாகும். இந்த உருவ வழிபாட்டு முறையை, வடதிருநெல்வேலி மக்களிடமிருந்து அகற்றவேண்டும் என்ற நோக்கத்தோடு ராக்லாண்ட், பிற மத கடவுள்களைப் பற்றியும், அவர்களுடைய பாவங்களைப் பற்றியும், அவர்களுடைய சமய நூல்களில் காணப்பட்ட ஆதாரங்கள் மூலமாகவும் தத்துவ ஞானிகளுடைய கருத்துக்கள் மூலமாகவும் சுட்டிக் காட்டிக் குறை கூறினார். எனவே தான் ராக்லாண்ட் அதிக எதிர்ப்புகளுக்கும், உபத்திரவங்களுக்கும் உட்பட்டார். இந்த உரையாடல்களின் மூலமாக வடதிருநெல்வேலி மக்களின் மனக்கண்கள் திறக்கப்பட்டன. இதன் விளைவாக, வடதிருநெல்வேலி மக்கள் தங்கள் சமயத்தைப் பற்றியும், அதன் பாரம்பரியங்களைப்பற்றிய உண்மைகளைப் பற்றியும் அறிந்து கொண்டார்கள்.



Missionary Encampment near Sivagasi

## கனவு மூலமாக நடைபெற்ற ராக்லாண்டின் நற்செய்தி பணி:

ராக்லாண்ட் உயிரோடு இருக்கும் பொழுது ராக்லாண்ட் மூலம் நற்செய்தியைக் கேட்டு இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ள மறுத்தவர்களில் அநேகர் ராக்லாண்டின் மறைவிற்குப் பின், ராக்லாண்ட் தங்கள்

**கனவு மூலம் நடைபெற்ற ராக்லேண்டின் நர்செய்திபணியால் வடதிருநேல்வேலியில் அநேகர் இயேசுவை ஏற்றுக்கொண்டு திருமுழுக்கு பெற்றனர்.**

கனவில் தோன்றி, உரையாடல் மூலம் நற்செய்தி அறிவித்து மறைந்து விட்டதாகவும், இதன் மூலம் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு திருமுழுக்குப் பெற்றதாகவும் கூறினார்கள். இப்படிப்பட்டவர்கள் வடதிருநெல்வேலியில் அநேகர் இருந்தார்கள். உதாரணமாக, 1860 ம் ஆண்டு மார்ச் மாதம் 26 ஆம் தேதி வேதநாயகம் சுற்றித் திரிந்து நற்செய்திப் பணியாற்றிக் கொண்டிருக்கும் பொழுது மேலபயலி (Melabayali) என்ற இடத்தில் தான் சந்தித்த இப்படிப்பட்ட ஒருவரைப் பற்றி இவ்வாறு எழுதுகிறார், இரண்டு வருடங்களுக்கு முன்பாக ராக்லாண்ட் மலையடிப்பட்டி என்ற இடத்தில் கூடாரம் அமைத்து நற்செய்திப் பணியாற்றி வந்தார். மலையடிப்பட்டியிலிருந்து சின்னகுளம் என்ற கிராமத்திற்குச் சென்று திரளான மக்களுக்கு இயேசு கிறிஸ்துவைப் பற்றி அறிவித்தார். மறவர் இனத்தைச் சேர்ந்த ஒரு பெரியவரும் நற்செய்தியைக் கேட்டுக் கொண்டிருந்தார். ஆனால் இவர் எந்தவிதமான பாதிப்பும் இல்லாமல் தன்னுடைய வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்தி வந்தார். சில மாதங்கள் கழித்து, இவருடைய கனவில் ராக்லாண்ட் இவருடைய வீட்டிற்கு வந்து, இவருடைய தோள்பட்டையில் தன்னுடைய கையை வைத்து இவரைக் கிறிஸ்தவராக மாறும்படி அறிவுரை கூறி மறைந்து விட்டாராம். உடனே இந்தப் பெரியவர் இதைக் குறித்துத் தீவிரமாகச் சிந்தித்து, இதைப் பற்றி அருளப்பன் என்ற உபதேசியாரிடம் கூறி, பின்பு திருமுழுக்குப் பெற்று, மற்ற மக்களும் இவருடைய வாழ்க்கையைப் பின்பற்றத் தக்கவிதமாய் மேலபயலி என்ற இடத்தில் வசித்து வருகிறார். பிற மக்களும் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக் கொண்டு, கிறிஸ்தவர்களாக மாற உபதேசம் செய்து வருகிறார். இன்று காலையில் கூட என்னைச் சந்திக்கும் முன் போதை தரும் மதுபானத்தை அருந்திக் கொண்டிருந்த இருபது பேருக்கு இயேசு கிறிஸ்துவைப் அறிவித்து வந்தார்.

> “நற்செய்தி பணியில் வெற்றியடைய தீட்டும் திட்டங்களில் மிகச் சிறந்த வழி இயேசு காட்டிய வழியே. அது கோதுமை மணிபோல் நிலத்தில் விழுந்து சாவதே – ராக்லாந்து”

# யார் இந்த மிஷனரிகள்

லூத்தரின் சீர்திருத்த சிந்தனைகள் மக்களிடையே பெரும் தாக்கத்தையும் புரட்சியையும் ஏற்படுத்தியது. கிறிஸ்துவாகிய தேவனை உலகமெங்கும் அறிவிக்க பல தேவ மனிதர்கள் தங்களின் உடல், பொருள் யாவற்றையும் விட்டு சென்றனர். இந்த கிறிஸ்தவ சீர்திருத்த எண்ணஅலைகள் தொடர்ந்து பல கிறிஸ்தவ சீர்திருத்த சிந்தனையாளர்களை உருவாக்கியது. சிந்தனையாளர்கள் பெருக பெருக சபையானது புதுவித தோற்றத்தை கொண்டது.. குறிப்பாக நம்மிடத்து ஊழியம் செய்த ஊழியர்களின் பிறப்பு தேசத்து சபைகளில் பெரும் புரட்சிகள் உண்டானது. குறிப்பாக இங்கிலாந்து சபையில் இந்த சீர்திருத்த எண்ணங்கள் பியூரிட்டானியர்கள் என்று அழைக்கப்படும் சுத்த மார்க்கத்தினரை உருவாகியது. இந்த புரட்சியால் பல கிறிஸ்தவ மிசனரிகள் உலகத்தாரிடம் கிறிஸ்துவால் அனுப்பபட்டனர். ஜெர்மனியில் ஆரம்பித்த இந்த சீர்த்திருத்த எண்ணங்கள் தொடர்ந்து இங்கிலாந்து மற்றும் ஸ்காட்லாந்து நாடுகளிடையே பரவியது. சுத்த மார்க்கத்தினரை தொடர்ந்து காங்கிரிகேசனல் மற்றும் பிரெஸ்பிட்டேரியன் எழுச்சிகள் பல மக்களை கிறிஸ்துவின் மந்தையில் சேர்க்க தூண்டியது. 1833-1845 வரை ஏற்பட்ட ஆக்ஸ்போர்ட் எழுச்சி என அழைக்கப்படும் இங்கிலாந்து சபையினரிடையே ஏற்பட்ட எழுச்சி பல படித்த மற்றும் திறமை வாய்ந்த மாணவர்களை ஊழியர்களாக மாற்றியது. நம்மிடத்து பல பள்ளி கல்லூரிகளையும் இந்த எழுச்சியானது உருவாக்கியது. காலங்கள் உருண்டோட கிறிஸ்தவம் உலகமெங்கும் பரவி இங்கு கிறிஸ்துவுக்கு சாட்சியாக வரலாற்றோடு புதைந்து மிளிர்கிறது.




இந்த அட்டவணை குறிப்பிட்ட காலத்தில் பிறந்த மிஷனரிகளின் எண்ணிக்கையை எடுத்துரைக்கிறது. இங்கிலாந்து சபையில் ஏற்பட்ட கிறிஸ்தவ சீர்திருத்த தாக்கத்தின் விளைவு மற்றும் தொடர்ச்சியாக கிறிஸ்தவத்தில் நிகழ்ந்த எழுப்புதல்கள் கிறிஸ்துவை உலகமெங்கும் அறிவிக்க பங்காற்றியுள்ளது.




இந்த அட்டவணை நம்மிடத்திற்கு வந்த கிறிஸ்தவ மிஷனரிகள் பயின்ற பல்கலைகழகங்களை சுட்டுகிறது. இந்த அட்டவணையின் படி பெரும்பான்மையான கிறிஸ்தவ மிஷனரிகள் ஆக்ஸ்போர்ட் மற்றும் கேம்பிரிட்ஜ் பல்கலைகழகங்களில் இருந்து வந்துள்ளனர் என்பது தெளிவாகிறது. இந்த பல்கலைகழகங்களில் ஏற்பட்ட எழுச்சியே மாணவர்களிடம் மிஷனரி தாகத்தை ஏற்படுத்தியது எனலாம்.

*We are using various techniques (Machine learning, Natural language processing) for analytics.*

இந்த அட்டவணை மிஷனரிகளின் எண்ணிக்கையை அவர்களின் வயதுடன் தொடர்புபடுத்துகிறது. பல மிஷனரிகள் தங்களின் வாழ்க்கை காலம் பாராது கிறிஸ்துவுக்காய் மடிந்திருப்பதை இதன் மூலம் உணர்ந்து கொள்ளலாம்.






இந்த அட்டவணை குறிப்பிட்ட காலத்தில் இறந்த மிஷனரிகளின் சராசரி வயதினை எடுத்துரைக்கிறது. நம்மிடத்திற்கு வந்த கிறிஸ்தவ மிஷனரிகளின் சராசரி வாழ்க்கை வயதானது சாதாரண மனிதர்களின் வாழ்க்கை வயதை விட குறைவானது என்பது மிஷனரிகளின் தியாகத்தையும், கிறிஸ்துவின் மீது அவர்கள் கொண்ட அன்பினையும் வெளிபடுத்துகிறது.

TINNEVELLY CHRISTIAN HISTORICAL SOCIETY

இந்த பதிவுகளில் மிஷனெரிகள் எனப்படுபவர்கள் திருநெல்வேலி, தூத்துக்குடிக்கு சி.எம்.எஸ், எஸ்.பி.ஜி மிஷன்கள் மற்றும் சென்னையில் பணிபுரிந்த இங்கிலாந்து சபையை சார்ந்த குருவானவர்கள், மற்றும் உதவி குருவானவர்களை (1000 பேர்) குறிக்கும் மற்ற பணித்தளத்தில் ஊழியம் செய்த மிஷனரிகளை பற்றிய ஆய்வுகள் தொடர்ந்து நமது மாதந்திர ஆய்விதழில் ஆய்வறிக்கைகளாக வெளிவரும்.

---

**இந்திய மிஷனரி சங்க முதல் மிஷனரி சாமுவேல் பாக்கிய நாதன்**

ஆந்திரா மாநிலம், தோர்ணக்கல் என்ற பகுதி, சரியான பாதைகள் இல்லாதிருந்தது. சிறுத்தையும், புலியும் நடமாடிய காட்டுப் பகுதிகளாகக் காணப்பட்டது. கோடைக் காலங்களில் பகலில் பயணம் செய்வது மிகக் கடினம் . ஏனெனில் அது வெப்பம் மிகுந்த பகுதி, இரவில் பயணம் செய்தாலோ திருடர்கள் கைவரிசை அட்டகாசமாகக் காணப்படும். அப்பகுதியில் சுவிசேஷம் அறிவிப்பதற்கு யார் முன் வரக்கூடும் ? 1903ஆம் வருடம் ஆரம்பிக்கப்பட்ட இந்திய மிஷனெரிச் சங்கம் அக்கேள்விகளை மக்கள் முன் வைத்தது. குடும்ப சூழ்நிலைகளால் பலர் முன்வரத் தயங்கியபோது மருதகுளம் பாக்கியநாதன் தன்னை மிஷனெரியாக அர்ப்பணித்தார். இவரே, அச்சங்கத்தின் முதல் மிஷனெரி என்பது குறிப்பிடத்தக்கது. இவர் தோர்ணக்கல் சென்று பணியாற்றிய மூன்று ஆண்டுகளில் 23 பெரியவர்களும், 33 குழந்தைகளும் ஞானஸ்நானம் பெற்றனர். உவைட்ஹெட் பேராயர் அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுத்தார். 300க்கும் அதிகமானவர்கள் ஞானஸ்நானம் பெற ஆயத்தமாக இருந்தனர். திருச்சபையை உண்மையிலும், உத்தமத்திலும் வழி நடத்தினார். தமது திருச்சபையைப் பற்றி இவர் கூறும்போது, 'இது பலமான திருச்சபை, ஏனென்றால் கிறிஸ்தவர்களாக மாறுகிறவர்களுக்கு உலகப் பிரகாரமான நன்மையை வழங்கும் சக்தி எங்களுக்கு இல்லை. கடனாகக் கொடுக்கும் வசதியும் இல்லை, மேல் நாட்டு மிஷனெரிகளைப் போன்று நாங்கள் உதவி செய்ய முடியாது. நாங்கள் செய்யக் கூடியது ஜெபம்தான். கிறிஸ்துவையே நம்பி வாழ அவர்களுக்குக் கற்றுக் கொடுக்கிறோம். இவரின் வார்த்தைக்கேற்ப மக்கள் விசுவாசத்தில் பெலப்பட்டுத் தங்கள் ஏற்றத்தாழ்வுகளை மறந்து கிறிஸ்துவில் மகிழ்ச்சியாக வாழ்ந்தனர். பேராயர் V . S . அசரியாவால் தோர்ணக்கல் மிகவும் சிறப்புப் பெற்றது. அப்பணிக்கு அடித்தளமிட்டவர் சாமுவேல் பாக்கியநாதன் அவர்களே.

## உங்களின் புத்தகங்களை கொடுத்து தாங்கிடுங்கள்

## இது உங்கள் நூலகம்

திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்று சங்கத்தின் சார்பாக விரைவில் உதயமாக இருக்கும் நூலகத்திற்கு பல்வேறு கிறிஸ்தவ பழைய புத்தகங்களை வரவேற்கின்றோம். அதன்படி உங்களிடம் உள்ள பழைய புத்தகங்களை வரலாற்று சங்கத்திற்கு நன்கொடை கொடுத்து உதவினால் வரலாற்று சங்க நூலகத்தில் உங்களுடைய குடும்ப பெயரில் அல்லது ஞாபகார்த்த பெயரில் ஒரு செல்ஃப் உருவாக்கப்படும். கிறிஸ்தவ வரலாற்று சங்கம் முன்னாள் ஊழியர்களை குரு வானவர்களை கவுரவப்படுத்த ஒரு புதிய முயற்சி அதே நேரத்தில் வருங்கால சந்ததிக்கு பொக்கிஷத்தை பாதுகாத்து கொண்டு போகவேண்டிய கடமையும் நமக்கு உண்டு.இதன் மூலம் ஆபிரகாம் பண்டிதர் நினைவு இணைய மின்னணு ஆய்வு நூலகத்தில் உங்களுக்கு சிறப்பு சலுகைகள் வழங்கப்படும்.

# கிறிஸ்தவமும் நற்செய்தி அறிவிப்பும்

அருள்திரு. H.ஜாண் சாமுவேல்

ஒவ்வொரு ஆண்டும் செப்டம்பர் மாதங்களில் 'இயேசு என்ற திருநாமத்திற்கு எப்போதுமே மிக தோத்திரம்' என்ற பாடல் திரும்பிய இடமெல்லாம் ஒலிக்கும். நம்முடைய பாரம்பரியமான திருச்சபைகள் தாம் பெற்றுக்கொண்ட நற்செய்தியை இவ்வுலகமும் அறிந்து கொள்ள வேண்டும் என்று தங்களுக்குள் கொண்ட தாகமே இந்த சுவிசேஷ ஊழியமாகும். 'அனுப்பப்படாவிட்டால் யார் செல்லுவார், அறிவிக்கப்படாவிட்டால் யார் அறிவார்' என்ற பாடலின் வரிகள் நம்மை அர்ப்பணிக்கவும், அறிவிக்கவும் தூண்டுகிறது. செப்டம்பர் மாதத்தில் ஒரு வாரம் இதற்காக சிறப்பாக ஒதுக்கப்பட்டு ஊழியங்கள் பல கிராமங்களில் நடைபெறும். இன்று பலவிதமான காரணங்களால் பாரம்பரியமாக செய்யும் காரியங்களுள் இதுவும் ஒன்றாக மாறிவிட்டது. அசனங்களுக்கு கொடுக்கப்படும் முக்கியத்துவத்தில் நூற்றில் ஒரு பங்கு கூட இன்று சுவிசேஷ பணிகளுக்குக் கொடுக்கப்படுவதில்லை.

யாரோ கல்வி அறிவில் குன்றியவர்களும், வாழ வழி தெரியாதவர்களும் செய்ய வேண்டிய பணியென நினைத்து பல பேர் ஊழியங்களைத் தாங்குவதோடு கூட நிறுத்திவிடுகிறார்கள். நம் பகுதியில் பணியாற்றிய மிஷனெரிகளின் அழைப்பையும் அர்ப்பணிப்பையும் காணும்போது, இவர்களா இவ்வுன்னதமான பணியைச் செய்வதற்கு தங்களை ஒப்புக்கொடுத்தார்கள் என சிந்திக்கத் தூண்டுகிறது.

## பேராயர் ராபர்ட் கால்டுவெல்

ராபர்ட் கால்டுவேல் அவர்கள் 1814ம் ஆண்டு மே மாதம் 7ம் தேதி வட அயர்லாந்து தேசத்தில் பிறந்தார். கால்டுவெல்லின் மூதாதையர்கள் ஸ்காட்லாந்தைச் சேர்ந்தவர்களாக இருந்தபடியினால் தம் பத்தாம் வயதில் குடும்பமாக ஸ்காட்லாந்து சென்று அங்கு கிளாஸ்கோ நகரில் குடியேறினார்கள். தலைசிறந்த கிளாஸ்கோ பல்கலைக்கழகத்தில் தன் படிப்பினை மேற்கொண்டார். வரலாற்று ஆசான் அருள்திரு. கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள் ராபர்ட் கால்டுவெல் அவர்களின் வாழ்க்கை வரலாற்று புத்தகத்தில் 'தன் குருவானவரோடு கூட கொண்டிருந்த ஐக்கியமே ராபர்ட் கால்டுவெல் அவர்களை கடவுளைப் பற்றி அதிகமாக சிந்திக்க வைத்தது. அதினிமித்தமாகவே 1830ம் வருடம் தன்னுடைய 16ம் வயதில் அவர் தம்மை கர்த்தரின் ஊழியத்திற்கு ஒப்புக் கொடுத்தார்' என்று குறிப்பிட்டிருக்கிறார்.



பேராயர் ராபர்ட் கால்டுவெல்

ராபர்ட் கால்டுவெல் அவர்கள் ஓவிய கலையை முறைப்படி கல்லூரியில் கற்றார்கள். கிளாஸ்கோ பல்கலைக்கழகத்தில் கிரேக்கம், எபிரேயம், லத்தீன் போன்ற மொழிகளைக் கசடற கற்றறிந்தார்கள். மேலும் தர்க்கம், தத்துவம் மற்றும் வீட்டு அறிவியல் (Logic, Philosophy, Home Science) போன்ற பாடங்களையும் கற்றறிந்தார். பல்கலைக்கழகத்தில் அவர் கற்ற காலத்தில் அவரே சிறந்த மாணவராக திகழ்ந்து, தலைசிறந்த மாணவர்களுக்கு கொடுக்கப்படும் 'ராபர்ட் பீல்ஸ் பரிசு' (Robert Peels Prize) பெற்றார். இத்தனை சிறப்பான கல்விகற்றவரே தன்னை உன்னதரின் சுவிசேஷப் பணிக்காக ஒப்புக்கொடுத்தார்.

குருவானவரோடு எத்தனை வாலிபர்கள் ஐக்கியமாக இருக்கிறார்கள்? எத்தனை குருவானவர்களின் வாழ்க்கை வாலிபர்களை ஆண்டவருக்கு தன்னை அர்ப்பணிக்க செய்கிறது?

## ரேனியஸ் ஐயரவர்கள்:

ரேனியஸ் ஐயரவர்கள் 1791ம் ஆண்டு நவம்பர் மாதம் 5ம் தேதி பிறந்தார். ரேனியஸ் ஐயரவர்களின் தந்தையார் ஆதோ ரேனியஸ் அவர்கள் ஜெர்மானிய தேசத்தின் படைத்தளபதியாகப் பணியாற்றினார்கள். மகிழ்ச்சியில் தளைத்த குடும்பம் சில காலங்களில் தந்தையின் திடீர் மறைவால் மிகவும் கஷ்டப்படத் தொடங்கியது. ரேனியஸ் அவர்களின் பெரியப்பா மிகுந்த செல்வந்தர். அவருக்கு குழந்தைகள் இல்லை. எனவே தன்னுடைய பண்ணையை கவனிக்கும்படியாகவும், தன் சொத்துக்கள் அனைத்திற்கும் வாரிசாகவும் ரேனியஸ் அவர்களைத் தெரிந்துகொண்டு தம்முடன் வைத்துக் கொண்டார். பெரும் செல்வந்தரான பெரியப்பாவின் சொத்துக்கள் அனைத்திற்கு ஒரே வாரிசு என்று அடிக்கடி தன் பெரியப்பா மற்றவர்களிடம் சொல்ல கேட்பார். தன் பெரியப்பாவின் வாழ்வில் காணப்பட்ட பெரும்பக்தி ரேனியஸ் அவர்களின் வாழ்வில் ஒரு பெரிய மாற்றத்தைக் கொண்டுவந்தது. மனம்போன போக்கில் வாழ்ந்து வந்த ரேனியஸ், தன் பெரியப்பாவிற்கு குழந்தைகள் இல்லையென்றாலும் கர்த்தரின் மீது அவர்கள் கொண்டிருந்த பக்தி, விசுவாசம் எல்லாம் வெகுவாக கவர்ந்து அவரை கர்த்தரிடமாகத் திருப்பியது. 'என்னைப்



ரேனியஸ் ஐயரவர்கள்

பின்பற்றி வா' என்ற ஆண்டவரின் வார்த்தை ரேனியஸ் அவர்களை கர்த்தருக்காக ஏதாவது செய்ய வேண்டுமென்ற வாஞ்சையைத் தூண்டியது. தன் வாலிப வயதில் தன்னை ஆண்டவருடைய ஊழியத்தினை செய்வது என்று முடிவெடுக்க வைத்தது. தன் பெரியப்பாவின் பெரும் சொத்திற்கு ஒரே அதிபதி, இவ்வுலகத்தின் பொருள் மேன்மையல்ல கர்த்தரின் பணியே சிறந்தது என்று தன்னை ஊழியத்திற்கு ஒப்புக்கொடுத்தார். இன்று எத்தனை தந்தையின் வாழ்க்கை பிள்ளைகளை ஊழியத்திற்கு அர்ப்பணிக்கச் செய்கிறது?



கனம் ஜாண் தாமஸ்

## கனம் ஜாண் தாமஸ்

கனம் ஜாண் தாமஸ் ஐயரவர்கள் ஐயர்லாந்து தேசத்தில் 1807ம் ஆண்டு நவம்பர் மாதம் 10ம் தேதி தாமஸ் - ப்வ்ரான்ஸெஸ் தம்பதியினருக்கு மூன்றாவது மகனாகப் பிறந்தார். பெரும் செல்வந்தரான தன்னுடைய தாத்தாவின் வீட்டிலே அநேக நாட்களைக் கழித்தார். நல்ல கல்விகற்று சிறந்ததொரு வக்கீலாக மாற வேண்டும் என்பது கனம் ஜாண் தாமஸ் ஐயவரர்களின் வாலிப நாட்களின் கனவு. அதின்படியே தலைசிறந்த ஒரு வக்கீலிடம் உதவியாளராக சேர்ந்து தன் பணியை ஆரம்பித்தார். ஒரு நாள் தன்னுடைய நண்பர்களோடு கூட சேர்ந்து ப்வ்ரெஷ் வாட்டர் என்ற இடம் வரை சென்றனர். திரும்பும் வழியில் அவருடைய நண்பர் ஒருவருக்கு அறிமுகமான ஒருவரின் வற்புறுத்தலின் பேரில் இங்கிலாந்தின் மேல் பகுதியிலுள்ள வேல்ஸ் நாட்டில் பெம்ப்ரோக் (Pembroke) என்ற ஊருக்கு அருகிலிருந்த லம்ப்வி என்ற இடத்திலிருந்த திருச்சபைக்கு ஆராதனைக்குச் சென்றனர். அங்கு அருள்திரு. ஜேம்ஸ் பயர்ஸ் (Rev.Byers) என்ற குருவானவர் அந்த ஆராதனையில் அருளுரை ஆற்றினார்கள். ஐயரவர்களின் பிரசங்கம் ஜாண் தாமஸ் அவர்களின் உள்ளத்தை உடைத்தது. ஆராதனை நிறைவு பெற்றவுடன் குருவானவரைச் சந்தித்து உள்ளம் உடைந்து தான் ஒரு பெரிய பாவி, தன் வாழ்வில் எந்த ஒரு விமோசனமும் இல்லை என்று அழுதார். இயேசுவின் அன்பை எடுத்துக் கூறிய குருவானவர் அவரை இரட்சிப்பின் பாதையில் நடத்தினார். அதன்பிறகு அந்த ஆலயத்திற்கு செல்ல ஆரம்பித்தார். தன் வாழ்வில் மிக ஆர்வத்தோடு நேசித்த வக்கீல் தொழிலை விட்டு மிஷனெரியாகச் செல்ல தன்னை அர்ப்பணித்தார். 1836ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 13ம் தேதி இங்கிலாந்து தேசத்தைவிட்டு இந்தியாவிற்கு புறப்பட்டார். இன்று ஆலயத்தில் கொடுக்கப்படும் செய்திகள் எத்தனை உள்ளங்களை உடைத்திருக்கிறது? செய்திகளைக் கேட்டு உள்ளம் உடைய ஒப்புக்கொடுப்போர் எத்தனைப் பேர் உண்டு?

## ஜாண் டக்கர்

ஜாண் டக்கர் அவர்கள் 1818ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 8ம் தேதி அன்று பிறந்தார். ஜாண் டக்கரின் வம்சாவழியினர் முதலாம் எலிசபெத்தின் வழிதோன்றல் ஆவார்கள். எனவே ஜாண் டக்கர் ஒரு அரச குடும்பத்தைச் சார்ந்தவர் என்று கூறுவதில் தவறில்லை. நல்ல வசதிப்படைத்தக் குடும்பத்தில் பிறந்த இவர் தன் கல்வியினை உலகத்தின் தலைசிறந்த பல்கலைக்கழகங்களுள் ஒன்றான ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் பயின்றார். மருத்துவம் பயின்று தன்னை ஒரு சிறந்த மருத்துவராக இந்த உலகத்திற்கு காண்பிக்க வேண்டுமென்பதே அவரின் நோக்கமாக இருந்தது. மருத்துவத்தின் மீது அவர் கொண்டிருந்த ஈடுபாடு இவர் மிஷனெரியாக பணியாற்ற தம்மை ஒப்புக்கொடுப்பார் என்று எண்ணுவதற்கு இடம் கொடாமல் போயிற்று. சிறுவயது முதல் அவர் உள்ளத்தின் ஆழத்தில் கிடந்த மிஷனெரி தாகம் நாட்கள் கடந்தபோது பெரிதானது. ஆரம்ப காலத்தில் தன் சொந்த ஜனத்திற்கு இயேசுவின் அன்பைக் கூற வேண்டுமென்றே தீர்மானித்திருந்தார். ஆனால் அவருடைய அழைப்பு வேறுவிதமாக மாறினது. அவர் தம்மை மிஷனெரியாக ஒப்புக்கொடுத்து இந்திய தேசம் வந்து தன் ஊழியத்தினைத் தொடர்ந்தார். ராஜ பரம்பரையில் வந்த ஒருவர் அடிமையின் ரூபமெடுத்த ஒருவரின் அன்பைக் கூற தன்னை அர்ப்பணித்தார். இன்று உயர்கல்வி கற்ற எத்தனை பேர் ஆண்டவருக்காக சுவிசேஷம் சொல்ல ஆயத்தமாயிருக்கிறார்கள்?

## சுவாட்ஸ் ஐயரவர்கள்

சுவாட்ஸ் ஐயரவர்கள் 1726ம் ஆண்டு அக்டோபர் மாதம் 26ம் தேதியன்று சூனன் பெர்க் என்ற இடத்தில் பிறந்தார். சுவாட்ஸ் ஐயரவர்களின் தாயார், இவர் பிறந்த பொழுதே ஆண்டவரின் ஊழியத்திற்கென்று இவரை அர்ப்பணித்தார்கள். சிறு வயது முதல் இயேசுவின் அன்பையும், ஆண்டவருக்காக செய்ய வேண்டிய பெரிய ஊழியத்தினையும் சொல்லி சொல்லி வளர்த்தார்கள். பள்ளி படிக்கும் காலத்தில் ஹெல்ம் என்னும் தலைமை ஆசிரியர் இவருக்கு மிகவும் பிடித்தமான நபராக இருந்தார். அவர் ஒரு சிறந்த தெய்வ மனிதர். தலைமை ஆசிரியருடன் கொண்ட நெருக்கத்தினால் கிறிஸ்தவ வாழ்வில் அதிக விசுவாசமடைந்தார். எட்டாம் வயதில் தலைமை ஆசிரியரின் வழிகாட்டுதலின்படி தன்னுடைய நண்பர்களையும், விளையாட்டினையும் விட்டுவிட்டு தனி ஜெபம் செய்யும்படியாக செல்லுவாராம். 1746ம் ஆண்டு ஹாலே பல்கலைக்கழகத்தில் மாணவராக சேர்ந்தார். அங்கு முனைவர். பிராங்கே என்ற ஆசிரியரின் தொடர்பு கிடைத்தது. பிராங்கே அவர்களின் தெய்வ பக்தியும், விசுவாச வாழ்வும் சுவார்ட்ஸ் ஐயரவர்களை ஆண்டவரின் ஊழியத்தினை செய்யும்படியாக அர்ப்பணிக்கச் செய்தது. இன்று எத்தனை தலைமை ஆசிரியர்களின் வாழ்வு மாணவர்களை ஜெபிக்கும்படியாகத் தூண்டுகிறது? வாழ்க்கைக்கு வழிகாட்டினால் போதாது மற்றவர்கள் வாழ வழிக்காட்டும் நபர்களை எத்தனை கல்லூரி பேராசிரியர்கள் இன்று உருவாக்கியிருக்கிறார்கள்?



சுவாட்ஸ் ஐயரவர்கள்

கனோன் ஆர்தர் மார்காஷிஸ்

கனம் ஆர்தர் மார்காஷியஸ் ஐயரவர்கள் 1852ம் ஆண்டு டிசம்பர் மாதம் 24ம் தேதி இங்கிலாந்து நாட்டில், செஷயர் வட்டத்திலுள்ள லெமிங்ற்றன் என்ற கிராமத்தில் கிறிஸ்தவ தம்பதியினருக்கு எட்டாவது மகனாக பிறந்தார். நல்ல கல்விகற்று தம் வாழ்வில் சிறந்து விளங்கினார். இளம்வயதில் தன்னை ஆண்டவருக்கென்று ஒப்புக்கொடுத்து மருத்துவ மிஷனெரியாக பணியாற்ற விரும்பினார். எனவே பரி. ஜியார்ஜ் மருத்துவ நிலையத்தில் மருத்துவம் கற்றார். அதன்பிறகு அங்குள்ள அரசு மருத்துவ கல்லூரியில் உடற்கூறு, உடலியல் போன்ற பாடங்களைக் கற்றுத்தேர்ந்தார். அதோடு கூட நிறுத்திவிடாமல் முதுநிலைத் தேர்வுக்காக தம்மை ஆயத்தம் செய்துகொண்டிருந்தார் ஆர்தர் மார்காஷிஸ் அவர்கள். அச்சமயத்தில் திருநெல்வேலி பகுதியில் மிஷனெரியாகப் பணியாற்றி கொண்டிருந்த கால்டுவெல் ஐயரவர்கள் தம் விடுமுறைக்காக இங்கிலாந்து சென்றிருந்தார்கள். அவர்கள் தம் அருளுரையில் திருநெல்வேலி பகுதியிலுள்ள தேவைகளைக் குறித்துச் சொன்னார்கள். உடனே மார்காஷியஸ் ஐயரவர்கள் இதுவே ஆண்டவரின் அழைப்பு என்று கருதி தம்மை ஊழியத்திற்கு ஒப்புக்கொடுத்து இந்தியா புறப்பட தயாரானார்கள். முதுநிலை படிப்பை முடித்திருப்பாரானல் மார்காஷிஸ் ஐயரவர்களுக்கு M.R.C.S.. L.R.C.P.. போன்ற பட்டங்களைப் பெற்றிருப்பார். ஆனால் பட்டங்களைக் காட்டிலும் ஆண்டவரின் சுவிசேஷப்பணி மிக முக்கியம் என்று கருதி தன் படிப்பை உதறிவிட்டு ஊழியப்பாதையில் பயணிக்கலானார். இன்று பட்டங்களை துறந்து, பாடுபட்ட இயேசுவின் சுவிசேஷத்தைக் கூற எத்தனை பேர் ஆயத்தம்?



கனோன் ஆர்தர் மார்காஷிஸ்

இந்தப் பட்டியல் இதோடு கூட நின்றுவிடவில்லை. எழுதினால் பலபக்கங்கள் செல்லும். அத்தனைத் தியாகமும், வாஞ்சையும் கொண்டவர்களாக சுவிசேஷத்தின் மீது தாகம் கொண்டவர்களாக மிஷனெரிகள் தங்கள் வாழ்வை அர்ப்பணித்தார்கள். அந்த மாமனிதர்கள் விதைக்கப்பட்ட இந்த மண்ணில் இன்று சுவிசேஷப்பணிகள் வெறும் சடங்காச்சாரமாக மாறும் அவலம் ஏற்படுகிறது என்பது வருத்தமே. பல மிஷனெரிகளை நமக்கு அனுப்பிய தேசங்கள் இன்று ஆண்டவரை மறந்து தள்ளாடிக்கொண்டிருக்கின்றது, காரணம் அவர்கள் சுவிசேஷம் அறிக்கும் தாகத்தைத் தனித்துக் கொண்டதினால்தான். நாமும் அவ்வழியே சென்றுவிடாதப்படி பகல்காலம் இருக்கும்மட்டும் நம்மை அனுப்பினவரின் பணியினை செய்வதற்கு ஒப்புக்கொடுக்க வேண்டும். நிச்சயமாக மந்தையில் சேராத அநேக ஆடுகள் ஆண்டவரின் மந்தைச் சேரும்

## படைப்புகளை அனுப்புவோர் கவனத்திற்கு...

1.படைப்புகளை அனுப்புவோர் நகல் எடுத்துக் வைத்துக்கொண்டு அனுப்பவும்.
2.படைப்புகளை மின்னஞ்சல் மூலமாக அனுப்புவது மட்டுமே அனுப்ப வேண்டும். பிரசுர விபரம் 60 நாட்களில் தெரிவிக்கப்படும்.
3.மொழிபெயர்ப்புகளை அனுப்புவோர் மூலத்தின் ஒளிநகலையும் இணைக்க வேண்டும்.
4.மின்னஞ்சலில் படைப்புகளை அனுப்புவோர் பிரதி மாதம் 15ம் தேதிக்குள் அனுப்ப அன்புடன் கேட்டுக்கொள்கிற்றோம்.
5.படைப்புகளை அனுப்புவோர் முழு முகவரியும் உங்களுடைய முழு பெயர், மின்னஞ்சல் முகவரி, புகைப்படம், தொலைபேசி எண் மறக்காமல் குறிப்பிட வேண்டும்.


கிறிஸ்தவ வரலாற்று சுவடுகள்,
கதவு எண் 2-2-3(4),வடக்குத்தெரு,
பங்களா சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (திருநெல்வேலி)

மின்னஞ்சல்: christianhistorical@gmail.com
தொலைபேசி: +91 9176780001


## எங்களை பற்றி

“மறைந்து மங்கி கிடக்கும்
உண்மையை உலகறியச்
செய்யும் மா உன்னத பணி.
திருப்பணி வாழ்க! வளர்க!”



★★★★★

அருட்திரு. பேராசிரியர். மா. தேவராஜ்,
கூடலூர், நீலகிரி


@christianhistorical
+91 9176780001
@christianhistorical
www.tchsportal.co.in
Tinnevelly Christian Historical Society

# சுவிசேஷகர் சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார்

ஜே.பர்னபாஸ்
சேலம் வரலாற்றுச் சங்கம்



17 ஆம் நூற்றாண்டின் ஆரம்பகாலம் அது. கி.பி.1623 ஆண்டு அப்பொழுது சேல நாட்டுப் பகுதியை சேலபதி நாயக்கர் ஆண்டுவந்தார்.இயேசு சபை (Society of Jesus) குருவான சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் தமிழ் நாட்டின் தூரப்பகுதிகளில் இயேசுவின் நற்செய்தியைப் போதிக்கும் தனது திட்டத்தை நடைமுறைப் படுத்த முடிவு செய்து, முதலில் மதுரையிலும், பின்பு தஞ்சாவூரிலும்,அடுத்தது திருச்சிராப்பள்ளியிலும் தனது திட்டத்தைத் துவக்க எண்ணியிருந்த வேளையில் திருச்சிராப்பள்ளி மன்னர் தஞ்சை நாயக்கருக்கு எதிராக போருக்கு தயார் செய்து கொண்டிருந்த நிலையில் சுவாமியார் திருச்சிராப்பள்ளியை விட்டுவிட்டு தொட்டியம் காரை பொட்டனாறு வழியாக சேந்தமங்கலம் வந்து சேர்ந்தார்.அப்பொழுது சேந்தமங்கலம் பகுதியை ஆண்டு வந்த இராமச் சந்திர நாயக்கர் சுவாமியாரையும் அவரோடு வந்த அவரது நான்கு பிராமண சீடர்களையும், உபதேசிமார்களையும், வரவேற்று உபசரித்து அவர்களுக்கு வீடும், ஆலயம் கட்ட நிலமும்,வேதபோதகம் செய்ய அனுமதியும் அளித்தார்.ஆனால், ஏனோ தற்காலிகமாக இவைகளை ஏற்க மறுத்த சுவாமியார் சேலம் நோக்கி தனது பிரயாணத்தைத் தொடர்ந்தார்.

### ரோமாபுரி பிராமணன்

சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் இத்தாலி நாட்டில் டஸ்கனி மாநிலத்தில் அரச குடும்பத்தில் உதித்த மகாபிரபு ஆவார். திரண்ட ஆஸ்தி, உயர்ந்த கல்வி செல்வாக்குகள் மிகப் பெற்றவர்.அப்பொழுது ரோமாபுரியில் போப்பாண்டவராக இருந்தவரின் நெருங்கிய உறவினரும் கூட.ஆனால், இவை அனைத்தையும் ஆண்டவர் இயேசுவின் திருப்பணிக்காக நஷ்டமும்,குப்பையுமாக எண்ணி விட்டுவிட்டு இயேசு சபையில் சேர்ந்து ஒரு குருவானார்.சங்கை பெர்னான்டஸ் சுவாமியாருக்கு உதவி குருவாக அவருடன் கி.பி.1606ஆம் ஆண்டு தமிழ்நாட்டிற்கு வந்து சேர்ந்தார்.

சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் இந்தியர்களோடு ஒரு இந்தியனாக வாழத் துணிவு கொண்டார்.முதலில் இந்து மேற்குலத்தாரை மனந்திருப்பினால் பின்னர் தாழ்ந்த குலத்தினரும் அவர்களைப் பின்பற்றுவர் என்று முடிவுசெய்துகொண்டார். இதுவே அவரது புதுமையான தவக்கோலத்திற்கு அடிப்படை.உயர்குல இந்துக்களை கிறிஸ்து நெறிக்குத் திருப்ப, ஒரு இந்து சந்நியாசியைப் போல துறவு கோலம் பூண்டு புலால் உணவை நீக்கிவிட்டு, சைவ உணவை ஒரு வேளை மட்டுமே உண்டு தவச்சீலராய் வாழ்ந்து வந்தார்.பிராமண சந்நியாசிகளைப் போல வெள்ளை வேஷ்டி தரித்தார்,தலைமுடி களைந்து குடுமி வைத்துக் கொண்டார்.நெற்றியிலே சந்தனம் பூசிக்கொண்டார். மார்பிலே தங்கம், வெள்ளி இழைகளால் செய்யப்பட்ட பூ நூல் அணிந்துகொண்டார்,காதுகளிலே பெரிய வளைய தோடுகள் அணிந்து கொண்டார்,கையில் ஆறுஅடிநீள மூங்கில் தடி வைத்துக்கொண்டார், மற்றொரு கையில் ஒரு செம்பு கமண்டலத்தில் நீர் வைத்திருந்தார், கால்களில் மரத்தாலான பாத குறடுகள் தொடுத்திருந்தார். மான்தோலில் உட்காருவது, படுத்துக் கொள்வது என்பதை வழக்கப்படுத்திக் கொண்டார்.அரச குலத்தில் பிறந்த ரோமானிய பிராமண சந்நியாசி என்று தன்னைத்தானே அழைத்துக் கொண்டார். சுவாமியாருக்கு இத்தாலியன், லத்தீன், பிரெஞ்ச், ஆங்கிலம், போர்த்துக்கீசியம், சமஸ்கிருதம், பெர்சியன், தமிழ் மற்றும் தெலுங்கு போன்ற மொழிகளில் நல்ல புலமை உண்டு.மேலும் சுவாமியார் தனது பெயரைத் தத்துவ போதக சாமி என்றும் மாற்றி வைத்துக் கொண்டார்.சுவாமியார் மார்பிலே தரித்துக் கொண்ட பூ நூல் ஐந்து புரிகள் கொண்டது; மூன்று புரிகள் தங்க இழைகளால் செய்யப்பட்டது, இவை

> 'யூதரை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்கு யூதனைப் போலவும்,...நியாயப் பிரமாணம் இல்லாதவர்களை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்கு அவர்களுக்கு நியாயப் பிரமாணம் இல்லாதவனைப் போலவுமானேன்...பலவீனரை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்குப் பலவீனருக்குப் பலவீனனைப் போலானேன்; எப்படியாகிலும் சிலரை இரட்சிக்கும்படிக்கு நான் எல்லாருக்கும் எல்லாமானேன்.'
>
> 1 கொரிந்தியர் 9:20-22.

முறையே பிதா, குமாரன், பரிசுத்த ஆவி ஆகிய திரியேக தெய்வத்தைக் குறிக்கும், மற்ற இரண்டு புரிகள் வெள்ளி இழைகளால் ஆனவை, அவை இயேசுவின் திருவுடலையும்,உயிரையும் குறிக்கும் என்று அதற்கு அவர் வியாக்கியானமும் கூறுவார்.

### அன்றைய சேலம் நகரின் தெருக்களில் சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் பிரசங்கம்

கி.பி.1623 ஆம் ஆண்டு ஆகமன காலம் (வருகையின் காலம்)சுவாமியார் தனது பிராமண சீடர்களுடனும், உபதேசிமார்களுடனும், சேலம் பிரயாணத்தைத் தொடர்ந்த பொழுது, பொய்மான் கரட்டருகே சேலபதி நாயக்கர் ஒரு பெரும் படையை நிறுத்தி வைத்து சேலத்திற்குள் சுவாமியார் நுழைவதை தடுத்தார்.ஒரு பெரும்படையை நிறுத்தி வைத்தும்கூட சுவாமியார் கிஞ்சிதமும் அஞ்சவில்லை! சேலம் சென்று இயேசுவின் சுவிசேஷத்தை அறிவிக்கும் தனது திட்டத்தைக் கைவிடவில்லை; வேறு மார்க்கமாக சேலம் நகருக்குள் நுழைய திட்டமிட்டார். உயிருக்கு பயந்து அவரது பிராமண சீடர்களும், உபதேசிமார்களும் சேந்தமங்கலம் திரும்பிச் சென்றனர். துணிச்சலாக சேலம் நகருக்குள் நுழைந்த சுவாமியார் சேலம் தெருக்களில் ஆண்டவர் இயேசுவைப் பற்றி பிரசங்கங்கள் செய்துவந்தார்.வரலாற்றில் முதல்முறையாக சேலம் நகரின் தெருக்களில் ஆண்டவர் இயேசுவின் திருப்பெயர் அறிவிக்கப்பட்டது. ஆனால் யாரும் சுவாமியாரின் இந்த போதனைகளை ஏற்றுக்கொள்ளவில்லை. வியாபாரிகளும், நெசவாளர்களும், தத்தமது வேலைகளிலேயே கருத்தாய் இருந்தனர். ஒருவர்கூட சுவாமியாரை ஏற்று உபசரிக்கவில்லை.மூன்று பக்கத்திலும் திறந்து பாழடைந்து கிடந்த ஒரு சத்திரத்திலே சுவாமியார் தங்கியிருந்து நோய்வாய்ப்பட்டார். சில நாட்களுக்கு பிறகு சுவாமியாரின் நிலைமையைப் பார்த்து இரக்கப்பட்ட ஒரு வியாபாரி அவரைத் தனது வீட்டில் ஏற்றுக் கொண்டு மருத்துவம் பார்த்து உபசரித்தார். (தற்பொழுது சேலம் மாநகரில் சத்திரம் என அழைக்கப்படும் பகுதியில் உள்ள ‘இராஜேந்திரா சத்திரம்‘தான் அன்று சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் தங்கியிருந்த இடம் என்று சேலம் மறைமாவட்டத்தில் முதன்மை குருவாக இருந்த அருள்திரு.மரிய



சூசை அடிகளார் கருதுகிறார்.) சுவாமியார் சேலம் வந்த அந்த காலகட்டத்தில் சேலம் நகருக்கு அருகே இருந்த அந்த பாழடைந்த சத்திரமும்,குளமும்(பிற்காலத்தில் இது லாங்லி குளம்- Longley Tank என அழைக்கப்பட்டது.) அவருக்கு புகலிடமாக இருந்திருக்கிறது. மூன்று பக்கங்களிலும் திறந்து பாழடைந்து கிடந்த இந்த சத்திரத்தில் இராத் தங்கி அதிகாலையிலே இந்த குளத்திலே குளித்து பின்பு சேலம் நகரமெங்கும் கால்நடையாகவே சுற்றித்திரிந்து கிறிஸ்துவின் நற்செய்தியை துணிவுடன் சுவாமியார் அறிவித்து வந்தார்.

தன்னை ஏற்றுக்கொண்டு தனது வீட்டின் முன்புற திண்ணையில் தனக்கு அடைக்கலம் கொடுத்த அந்த வியாபாரியின் வீடு சுவாமியாரின் தலைமையிடமாக இப்பொழுது மாறிப்போனது.சேலம் நகர மக்கள் சுவாமியாரிடம் ஆசி பெறவும், வேதம் கேட்கவும் வந்தார்கள்.அப்படி வந்தவர்களுக்கு பனை ஓலைகளில் பரிசுத்த வேதாகம வசனங்களை எழுதிக்கொடுத்து வந்தார்; இந்த பனை ஓலைகளை வாங்கி வாசித்தவர்கள் தங்கள் நோய் நொடிகள் நீங்கி சுகமடைந்தனர். சேலபதி நாயக்கரின் படைவீரர்களில் ஒருவன் இப்படி இவரால் குணமடைந்தான். செய்திகள் அனைத்தையும் அறிந்த சேலபதி நாயக்கர் சுவாமியாரை தன்னுடைய பாளையத்திற்கு வரவழைத்து,தனது பிராமண ஆலோசகர்களுடன் அவரது கிறிஸ்தவ போதனைகளைக் கேட்டார்.

### வரலாற்றுச் சிறப்பு மிக்க மாரமங்கலம் மிஷன்

அப்பொழுது சேலபதி நாயக்கரிடம் தஞ்சமடைந்திருந்த சேந்தமங்கலம் முன்நாள் பாளையக்காரரும் இப்போதைய அதிபதி இராமச்சந்திர நாயக்கரின் அண்ணனுமான திருமங்கல நாயக்கர் சுவாமியாரின் போதனைகளைக் கேட்டு அவரது சீடராக மாறி தனது குடும்பத்தினருக்கு வேத போதகம் செய்யும்படி கேட்டுக் கொண்டார்.கி.பி.1624 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் ஒரு வயதான சிப்பாயும், சாகுந்தறுவாயிலிருந்த ஒரு வள்ளுவ பண்டாரமும் ஞானஸ்நானம் பெற்றனர்.அதே ஆண்டு மார்ச் மாதத்தில் சுவாமியார் தனது தலைமையிடமான கொச்சிக்கு அழைக்கப்பட்டார்.

சுவாமியார் சேலத்தை விட்டு கொச்சிக்கு சென்ற பிறகு சேலபதி நாயக்கர் திருமங்கல நாயக்கரை தன்னோடு சேர்த்துக் கொண்டு சேந்தமங்கலம் நாயக்கரோடு போர் தொடுத்தார்.திருமங்கல நாயக்கருக்கு அவரது சேந்தமங்கல நாட்டை அவர் தம்பி இராமச்சந்திர நாயக்கரிடமிருந்து மீட்டுத்தருவதாக உறுதிகூறி அவரைபோருக்கு அழைத்துச் சென்றார்.ஆனால்,உண்மையில் போரில் வெற்றி பெற்றவுடன் திருமங்கல நாயக்கரை கொன்றுவிட சேலபதி நாயக்கர் திட்டமிட்டு இருந்ததை அறிந்து கொண்ட திருமங்கல நாயக்கர் சேலத்திலிருந்து தனது குடும்பத்தாருடனும், தனது நாற்பதற்கும் மேற்பட்ட விசுவாச சகாக்களுடனும் தப்பி ஓடி மாரமங்கலம் நாயக்கரிடம் அடைக்கலம் அடைந்தார்.இப்படி அடைக்கலம் அடைந்த திருமங்கல நாயக்கர் கொச்சியில் இருந்த சங்கை நொபிலி சுவாமியாருக்கு தனக்கும், தனது குடும்பத்தாருக்கும், ஞானஸ்நானம் கொடுக்க மாரமங்கலம் வரும்படி கடிதம் ஒரு ஆளிடம் கொடுத்து அனுப்பினார். ஜுலை மாதத்தில் சுவாமியார் கொச்சியிலிருந்து திரும்பும்போது அந்த ஆள் சுவாமியாரை சந்தித்து மாரமங்கலம் அழைத்து வந்தார்.

மாரமங்கலம் வந்து சேர்ந்த சுவாமியாரிடம் திருமங்கல நாயக்கர் தனது ஆண்மக்களை அனுப்பி அவர்களுக்கு ஞானோபதேசம் தந்து ஞானஸ்நானம் அளிக்கும்படி வேண்டிக் கொண்டார்.திருமங்கல நாயக்கர் மாரமங்கலத்தில் சுவாமியாருக்கு ஒரு வீடும் கொடுத்தார். அங்கேதான் சகல புனிதர்களின் திருநாளன்று திருமங்கல நாயக்கர் ஞானஸ்நானம் பெற்றார்.கர்த்தர் பிறந்த திருநாளன்று திருமங்கல நாயக்கரின் மனைவி ஞானஸ்நானம் பெற்று திருச்சபையில்சேர்ந்தார்.இந்தசமயத்தில்தான் சேந்தமங்கலம் இராமச்சந்திர நாயக்கர் தனது அண்ணன் திருமங்கல நாயக்கரோடு சமாதானம் செய்துகொண்டார்.பிறகு இந்த இரண்டு சகோதரர்களும் ஒன்றுசேர்ந்து சேலபதி நாயக்கரோடு



போரிட்டனர்.கி.பி.1626 ஆம் ஆண்டு அந்த இரண்டு சகோதரர்களின் தாயாரும்,இராமச்சந்திர நாயக்கரும் ஞானஸ்நானம் பெற்றனர்.இந்த சமயத்தில்தான் மேட்டூருக்கு அருகில் வன்னிய குலத்தவர்களில் சிலர் கிறிஸ்தவ விசுவாசத்தை ஏற்றுக்கொண்டனர். மாரமங்கலத்தில் நன்கு கற்றறிந்த லிங்காயத்து பண்டாரம் ஒருவன் ‘முத்தியுடையான்‘ என்ற பெயரில் ஞானஸ்நானம் பெற்று, தனது சீடர்கள் 83 பேரையும் கிறிஸ்தவ விசுவாசத்தில் இணையச் செய்தார்.அவர்களில் சிலர் பிற்காலத்தில் சேலத்திற்கும்,ஈரோட்டிற்கும் சென்று வாழ்ந்தனர்.

### கொங்கு மண்டலத்தின் முதல் தேவாலயம்

கி.பி.1626 ஆம் ஆண்டின் இறுதியில் மாரமங்கலத்தில் ஒரு கொடிய தொற்று நோய் பரவியது.அதற்கு காரணம் அங்கு தங்கியிருந்த சங்கை நொபிலி சுவாமியார் தான் என்று கூறி சுவாமியாரை ஊரைவிட்டுத் துரத்த மாரமங்கலம் கெட்டி முதலி எண்ணியிருந்த வேளையில், சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் மாரமங்கலத்தில் ஒரு ஆலயத்தைக் கட்டி, அதன் மீது சிலுவையை நாட்டினார்.உடனே அந்த ஊரில் பரவியிருந்த கொள்ளைநோய் நீங்கியது. இந்த ஆலயம்தான் கொங்கு மண்டலத்திலே முதல் கிறிஸ்தவ தேவாலயம். பிறகு சுவாமியார் மதுரை மிஷனிலிருந்து சங்கை மனுவேல் மார்டின்ஸ் என்ற இயேசு சபை குருவானவரை தனக்கு உதவி குருவாகவும், தனக்குப்பின் இந்த மாரமங்கலத்தில் பொறுப்பு ஏற்று ஊழியம் செய்யவும் அழைத்துவந்தார். சில நாட்களுக்குப் பின்பு சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் மதுரைக்கு அழைத்துக் கொள்ளப்பட்டார்.அதன்பின்பு சுவாமியார் இப்பகுதிகளுக்கு திரும்பி வரவே இல்லை! ஆனாலும்,சங்கை நொபிலி சுவாமியார் சேலநாட்டுப் பகுதியில் தொடங்கிய கிறிஸ்தவ சகாப்தம் சுவாமியாரின் சேலம் வருகையிலிருந்து துவங்கி உலகமுடிவுவரை தொடரும் அமைப்பாக வளர்ந்து வருகிறது.தற்பொழுது சேலம் மாவட்டத்தில் ஓமலூர் தாலுக்காவில் உள்ள உம்பளிக்கை மாரமங்கலம் (உ.மாரமங்கலம்) தான் சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் கட்டி எழுப்பி சிலுவையை நாட்டிய அந்த முதல் தேவாலயம் அமைந்த இடம்.இன்று அங்கே வேறு ஒரு தேவாலயம் தொடர்ந்து சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் துவங்கி நடத்திய பணிகளை நாம் காணும்படி செயல்பட்டுவருகிறது. 395 ஆண்டுகளுக்கு முன்பு இந்த இடத்தில் முதல் கிறிஸ்தவ தேவாலயத்தை ஸ்தாபித்த சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியார் தமிழுக்கு தொண்டுசெய்த ஐரோப்பியர்களில் முன்னோடியாக திகழ்ந்தவர்.தமிழ் உரைநடை வளர்ச்சிக்கு வழிகாட்டிய முன்னோடி.தமிழில் ஞானோபதேச காண்டம்,மந்திர மாலை, ஆத்தும நிர்ணயம், தத்துவ கண்ணாடி, ஏசுநாதர் சரித்திரம் , போன்ற 18 உரைநடை நூல்களை இயற்றி தமிழ் வளர்த்தவர். மேலும் சங்கை நொபிலி சுவாமியார் தமிழில் சொற்பொழிவு ஆற்றுவதிலும், சமய வாதம் செய்வதிலும் வல்லமை பெற்றவராகத் திகழ்ந்தார். இந்திய கிறிஸ்தவ இறையியலின் தந்தை (Father of Indian Christian Theology)என்று அழைக்கப்படும் சங்கை இராபர்ட் டீ நொபிலி சுவாமியாரின் சேலம் வருகையும்,நற்செய்திப் பணிகளும், வரலாற்றுச் சிறப்புமிக்க மாரமங்கலம் மிஷன் ஸ்தாபிதமும் சேலம் வரலாற்றில் ஒரு மகத்தான சாதனை பக்கங்கள்.



# சீகன்பால்க்கின் சீர்த்திருத்தம்

அருள்திரு முனைவர் ச.இராஜசேகரன்

இன்றும் இலக்கியநடையில் பேசுகிறவர்களுக்கும் உரைநடைத் தமிழ் பேசுகிறவர்களுக்கும் இடையே பெரும் பேதங்கள் இருக்கிறது. ஆனாலும் இன்று இலக்கியநடைத் தமிழைப் பேசுகிறவர்கள் மிகவும் குறைவு, நவீன தமிழ் என்று உரைநடை தமிழைப் பேசுகிற தமிழ் ஆசிரியர்களே அதிகம். வெகுசிலரே. ஆங்கிலம் கலக்காத தமிழைப் பேசுகிறார்கள். குறிப்பாக இலங்கைத் தமிழர்களும் அவர்களை ஆதரிக்கும் தமிழ்ச் சங்கங்கள், க அமைப்புகளும் தூயத்தமிழைப் பேசுவதில் பெருமைக்கொள்கிறார்கள். அதனை உயர்த்திப் பிடிக்கிறார்கள். தமிழ் வாழ்க என்போரும், தமிழ் ஆசிரியராகவோ பேராசிரியராகவோ இருந்துகொண்டு தன் பிள்ளைகளை ஆங்கிலப் பள்ளியில் படிக்கவைக்கும் முரண்பாட்டாளர்கள் மத்தியில் ஜெர்மன் மொழியைத் தாய்மொழியாகக் கொண்ட சீகன்பால்க் தமிழ் மொழியின் அருமையை அறிந்து அதனை விரைவில்கற்று, அதனை எளிமைப்படுத்தியும் அதன் மூலம் மொழிபெயர்ப்புகள் பல செய்தும், பல இலக்கணம் மற்றும் அகராதி நூல்கள் எழுதி இலக்கியநடை மொழியை உரைநடை மொழியாக மாற்றி இன்று அநேகர் உரைநடையில் பயிலவும் எழுதவும் பயிற்றுவிக்கவும் அடித்தளமிட்ட சீகன்பால்க்கின் சீரிய சீர்த்திருத்தப்பணி ஒரு மொழி விடுதலைப்பணியாகும் என்றால் அது மிகையாகாது.



### ஓலையில் ஒடுங்கியிருந்ததிலிருந்து காகிதத்திற்கு விடுதலை

அக்காலத்தில் தமிழ் எழுத்துக்கள் பெரும்பாலும் ஓலையில் எழுதப்பட்டிருந்தன. பண ஓலையில் எழுதப்படுவதற்கு அந்த ஓலை அதிக ஈரமாகவோ அல்லது அதிகம் காய்ந்ததாகவோ இருக்கக்கூடாது. அத்துடன் அதில் மஞ்சள் அளவாக, பதமாகத்தடவி பதப்படுத்தவேண்டும். ஓலையில் புள்ளி எழுத்துக்களை எழுதமுடியாது. காரணம், ஓலையை எழுத்தாணி கொண்டே எழுதவேண்டும். பெரும்பாலும் தமிழ் மொழி ஓலைச்சுவடிகளே அதிகம். சமஸ்கிரத ஓலைச்சுவடிகள் பெரிதும் இல்லை. ஆனாலும் இந்த ஓலைச்சுவடிகளில் உள்ள இலக்கியங்கள் மேல்குடி மக்கள், அந்தணர்கள்என்றுஅழைக்கப்படுகிற பிராமணர்களிடமும் அரசவையின் ஆய்வுக்கூடத்திலேதான் அதிகம் இருக்கும். இந்த ஓலைச்சுவடிகளைப் பாமரர்கள் பார்ப்பதே அரிது, அவர்களுக்கு அதைப்படிக்கவும் எழுதவும் வாய்ப்பில்லை . ஆகவே ஓலைச்சுவடிகளில் உள்ள இலக்கியங்கள் ஏழை, எளிய மற்றும் பிற்படுத்தப்பட்ட ஜாதி மக்களுக்குக் கிடைக்கப்பெறாதவைகள் பெரும்பாலான ஓலைச்சுவடிகள் வானவியல், ஜோதிடம், எண்கணிதம் போன்றவற்றை உடையதால் அதை யாருக்கும் கொடுக்கமாட்டார்கள் என தமிழ் அறிஞர்கள் கருதுகிறன்றனர்.

சீகன்பால்க் போன்ற மிஷனெரிகள் ஓலைகளிலேயே வேதத்தையோ அல்லது முதன் முதலில் அச்சிட்டு வெளிவந்த விசுவாசப்பிரமாணம் மற்றும் பத்துக் கட்டளைகளையோ எழுதியிருந்தால் அது எளிய மக்களைச் சென்றடைந்திருக்காது. எப்படி சீர்த்திருத்தத் திருச்சபை உருவாவதற்கு முன் வேதாகமம் சங்கிலியால் கத்தோலிக்க போப் ஆண்டவர் மூலம் கட்டப்பட்டு, இறையியல் மாணவர்கள் மாத்திரம் படிக்கும் நிலை இருந்ததோ அதைப்போன்று இந்தியாவில் ஓலையில் உள்ள வேதாகமம் அந்தணர்கள் மட்டும் படிப்பதற்கு மட்டுமே இருந்திருக்கும். கிறிஸ்தவ சத்தியம் ஒரு கூட்டத்தாருக்கு மட்டுமே சென்று அவர்களிடம் அடிமைப்பட்டிருக்கும். சீகன் பால்க் வேதத்தைத் தமிழ் மொழியில் காகிதத்தத்திற்கு விடுவிக்கப்பட்டது. ஓலையிலிருந்து காகிதத்திற்குத் தமிழைக் கொண்டுசெல்ல சீகன்பால்க் பட்ட கஷ்டம் அதிகம். குறிப்பாக அந்நாட்களில் அநேக ஓலைச்சுவடிகள் அனல் வாதம் மற்றும் புனல் வாதம் மூலம் அழிக்கப்பட்டன என்றும் அவற்றுள் எதிர்நீச்சல் போட்டு கரையை அடைந்தவை மட்டுமே சிறந்தன என்பதை மணோன்மனியம் சுந்தரம்பிள்ளை கூறுகிறார். இவற்றில் எதிர்நீச்சல் போட்டு வென்று வந்த இலக்கியங்களில் ஒன்றாக உலகப்பொதுமறையான திருக்குறளைக் கருதமுடியும். ஆனால் இன்று சீகன்பால்க்கின் வழி தமிழை அழிக்கமுடியாத நிலைக்கு தமிழ் உயர்ந்திருகிறது. அதற்கு மூலக்காரணமாக அமைந்தது அச்சு வடிவில் காகிதத்தில் அன்று வெளியிடப்பட்ட இலக்கியங்களாகும்.

வேதாகமம் அவரவர் மொழியில் இருக்கவேண்டும் என்பதால்தான் இயேசுவின் காலத்தில் கூட ரோமர்கள் ஆட்சிக்கு கீழ் அடிமைப்பட்டு அக்காலத்தில் பிறந்து வளர்ந்த யூதர்கள், வேதத்தைப் புரிந்து கொள்ள வேண்டும் என்னும் உயரிய நோக்கில் அவர்களுடைய வேதத்தை (பழைய ஏற்பாட்டை) எபிரேய மொழியிலிருந்து கிரேக்க மொழிக்கு மொழிபெயர்த்தனர். ஆனால் கத்தோலிக்கர்கள் வேதத்தை பல்வேறு மொழிகளில் மொழிபெயர்க்காமல் அதனை

கட்டிப்போட்டிருந்தார்கள். அதனை எதிர்த்து உருவான சீர்த்திருத்த சபையிலிருந்து மிஷனெரியாக வந்த சீகன் பால்க் இயேசுவின் வாழ்வையும் அவருடைய போதனைகளையும் அறியாமல் புதிய விசுவாசிகள் பின்வாங்கிப் போகாதிருக்கவும், கிறிஸ்துவின் போதனையில் அவர்கள் நிலைத்திருக்கவும், அவர்கள் மொழியில் வேதம் இருக்கவேண்டியது அவசியம் என்பதை உணர்ந்து, ஸ்கிமிட்டின் கிரேக்க புதிய ஏற்பாடு, லத்தீன் வல்கேட், மார்ட்டின் லூத்தரின் ஜெர்மன் மொழி பெயர்ப்பு முதலானவைகளை ஆதாரமாகக் கொண்டு, டேனிய, போர்ச்சுக்கீசிய வேதாகமங்களின் உதவியுடன் 1708, அக்டோபர் 17ல் புதிய ஏற்பாட்டை தமிழில் மொழிபெயர்க்கத் தொடங்கி, 1711 மார்ச் 31 அன்று முடித்தார். பல்வேறு இன்னல்களுக்கிடையே 1713ல் அச்சில் ஏற்றி, 1715, ஜீலை 15ம் தேதி அன்று இந்திய வரலாற்றில் முதன் முதலில் தமிழ் புதிய ஏற்பாடு அச்சடிக்கப்பட்டு வெளிவந்தது. இதனால் இன்று வேதமும் தமிழ்மொழி உரைநடை மற்றும் பல்வேறு இலக்கிய நடையும் காகிதத்தில் வெளிவருகிறது. எளிய முறையில், ஏழைகளுக்கும் கிடைக்கும்வகையில் காகிதத்தில் தமிழில் அனைத்துவகை பாடங்களும் கிடைக்கப்பெறுகிறது. அத்துடன் இன்று உலக மொழிகளிலேயே இரண்டாவதாக, கணிணியில் தமிழ்தான் இருக்கிறது. இந்த அளவு நவீன வடிவில் தமிழ் வளர்வதற்கு அஸ்திபாரமாக இருந்தது உரைநடையும் அதனைத் தொடர்ந்து அவைகள் காகிதத்தில் அச்சிட்டு வெளிவந்ததுமேயாகும்.

இதே ஆண்டில் அவர் தனது பிறந்த நாட்டிற்குச் சென்றபோது, மலையப்பன் என்ற இளைஞரை அழைத்துச்சென்று, கப்பலிலேயே பழைய எற்பாட்டில் ரூத் புத்தகம் வரை மொழிப்பெயர்ப்பு செய்தார். கிறிஸ்துவின் மேல் உள்ள இவரது பற்றும் தமிழ் மக்களைக் கிறிஸ்துவுக்கு சீடராக்கவேண்டும் என்கிற இவரது தனியாத தாகமும் இம்மொழி விடுதலைக்கு வித்திட்டது. 1716ம் ஆண்டு தரங்கம்பாடியில் இறையியல் கல்லூரி ஒன்றை நிறுவி, வேதம் ஒரு தரப்பினருக்கு மட்டுமல்ல, அனைத்து தரப்பினருக்கும் உரியது என்பதை உறுதிசெய்தார். இன்றும் உரோம கத்தோலிக்க சபையின் தலைவர் போப் ஒரே இனத்தை சார்ந்தவராகவே இருப்பது போல இந்தியாவில் பிராமணர்கள் மட்டுமே வேதத்தைப் படிக்கவும் போதிக்கவும் தகுதியானவர்கள் என்று இருந்த நிலையை மாற்றி தாழ்த்தப்பட்ட இனத்தாரும் வேதத்தைக் கற்கவும் கற்பிக்கவும் கிறிஸ்துவின் அதிகாரம் பெற்றவர்கள் என்பதை மொழ விடுதலைப்பணி மூலம் எடுத்துரைத்தார்.

### அந்தணர்களின் அடிமையாயிருந்ததிலிருந்து பாமரர்களுக்கு விடுதலை

தமிழ் மொழி மிகவும் கடினமான மொழிகளில் ஒன்று. அதற்குப் பல காரணங்கள் உண்டு, இம்மொழியில் உயிர் எழுத்துக்கள் 12ம் மெய்யெழுத்துக்கள் 18ம் உயிர்மெய் எழுத்துக்கள் 216ம், ஒரு ஆயுத எழுத்துடன் சேர்த்து 247 எழுத்துக்கள் உள்ளன. இத்தனை எழுத்துக்களை மனப்பாடம் செய்வதும், அதனைச் சரியாகப் பயன்படுத்திப்படிப்பதும், எழுதுவதும் கடினம். இதனால், தமிழ் மொழியைத் தமிழர்கள் படிப்பதே கடினமாக இருக்கும். பாமரர்கள் தமிழ் பேசினாலும் அந்தணர்களின் தமிழ் மொழியிலிருந்து முற்றிலும் இன்றுவரை வேறுபட்டிருக்கிறது. பெஸ்கி மதுரையில் உள்ள ஒரு பிராமணரிடம் தமிழ் கற்றதால் அவருடைய மொழி வேறுபட்டிருந்தது, ஆனால் சீகன் பாமரமக்களிடம் அவர்களில் ஒருவராக இருந்து, தம்மைத் தாழ்த்தித் தமிழ்ப் பயின்றார். மரியாள் மற்றும் யோசேப்பைப் பற்றித் தேம்பாவணி போன்ற இலக்கியங்களை எழுதியிருக்கிறார் பெஸ்கி. ஆனால் அதைவிட மேன்மையாகத் தமிழில் வேதம் அவசியம் என்பதை சீகன் உணர்ந்தார். ஆகவே அவருடைய மொழி பாமரமக்களுக்கு ஏற்றதாயிருந்தது. சிலவார்த்தைகளின் ஓசையையும் அதன் வடிவத்தையும் மாற்றி, ஒவ்வொரு குலத்திற்கு, இனத்திற்கு ஏற்றார்போல மனிதர்களுக்குப் பெயரிடுதல் இருந்ததை, பாமரமக்களுக்கு ஏற்றார்போல் புதிய பெயர்களைக் கொடுத்துத் தமிழ்மொழி மூலம் சமூகவிடுதலையைக் கொண்டுவந்தார் சீகன் என்பதை அறியமுடிகிறது

வழித்தோன்றலை உருவாக்காதவர்கள் சிறந்த தலைவர்களாவதில்லை. சீகன்பால்க் அநேக வழித்தோன்றல்களை உருவாக்கினார். அத்துடன் வழித்தோன்றல்கள் உருவாவதற்கு ஏற்ப பல நூல்களை எழுதினார். ஜெர்மனியர்கள் அவருக்குப்பின்பு தமிழகத்திற்கு மிஷனெரியாக வருவதற்கு ஏற்ப தென் இந்தியாவின் மதக் கொள்கைகள், பழக்கவழக்கங்கள், ஆசாரங்கள். இலக்கியங்கள், பாடல்கள், ஆகியவற்றை ஜெர்மன் மொழியில் 44 அதிகாரங்களைக் கொண்டு 332 பக்கங்களில் எழுதினார். லத்தீன் மொழியில் தமிழ் இலக்கணம் எழுதினார். தமிழ்நாட்டுத் தெய்வங்களின் பரம்பரையைப் பற்றிய ஒரு புத்தகத்தையும் எழுதினார். சபையார் பாடுவதற்காகப் பல பாடல்களை மொழிபெயர்த்தார். தமிழ் இராகங்களுக்கு ஏற்ற கீர்த்தனைகளையும் இயற்றினார். கிறிஸ்தவ விசுவாசத்தைப்பற்றிச் சிறிய வினா - விடை புத்தகத்தையும் எழுதினார். இவர் படித்த 161 தமிழ் நூல்களைக் கணக்கிட்டுக் காட்டியுள்ளார் என்கிறார் மீனாட்சிசுந்தரம், அதாவது அவர் படித்த புத்தகங்களை மீள்பார்வை அந்த புத்தகங்கள் என்ன சொல்கிறது என்பதைப்பற்றி எழுதியிருக்கிறார். நீதி வெண்பா, கொன்றை வேந்தன், உலகநீதி என்ற புத்தகங்களையும் ஒன்று சோத்து 'நானாவித நூல்கள்' என்ற புத்தகத்தையும் எழுதினார். கடவுள், மனிதன், சமயம், பண்பாடு போன்ற தலைப்புகளில் அவரது நூல்கள் இருந்தன. நாள்காட்டியை உருவாக்கியிருக்கிறார் சீகன்பால்க். இவருக்குப் பின்பு தமிழகம் வந்த இராபர்ட் கால்ட்வெல், ஜி.யு. போப், எல்லிஸ் போன்றவர்கள் தமிழ்த்தொண்டை இன்னும் சிறப்பாகச் செய்ய சீகன்பால்க் அடித்தளம் அமைத்தார் என்றால் அது மிகையாகாது.

சீகன்பால்க் ஆண்களுக்கென்றும் பெண்களுக்கென்றும் மற்றும் குழந்தைகளுக்கும் தனித்தனியே

பள்ளிகளை ஆரம்பித்தார். திண்ணைப்பள்ளியின் மாதிரியைப் பின்பற்றிப் பாடத்திட்டங்களையும், பாடப்புத்தகங்களையும் எழுதினார். இதனால் ஒடுக்கப்பட்ட மக்களின் கல்வி கனவாக இல்லாமல்
நினைவாக மாறியது. அனைவருக்கும் கல்வி என்ற அவர் விதைத்த விதை இன்று ஆலமரமாக வளர்ந்து ஆயிரம் காலத்துப்பயிராக வளர்கிறது. தமிழ் மொழியைக் கற்றுக்கொள்ள காலமும், செலவும் அன்று அதிகம், ஆனால் சீகன்பால்க் மூலம் இன்று எளிமையாகவும், செலவு இல்லாமலும் மாறியிருக்கிறது. தமிழ் மொழியில் புள்ளியிட்டு வாக்கியங்களை வேறுபடுத்திக் காட்டுவதில்லை. சொற்களை ஒன்றிலிருந்து ஒன்றை பிரிப்பதில்லை, எல்லா சொற்களும் ஒன்றைப்போலவே இருப்பதால் அதை ஓலைச்சுவடிகளிலிருந்து ஒரு ஆசான் இல்லாமல் படிப்பது கடினம். ஓலைச்சுவடிகளை நகல் எடுப்பது கடினம், ஆனால் இன்று காகிதத்தில் உள்ள செய்திகளை எளிதில் நகல் எடுத்து ஏழைகளும் பயன்படுத்தலாம். தமிழ் மொழியை முறையாகக் கற்றுக்கொள்ளவேண்டும் என்கிற அவசியத்தை ஒடுக்கப்பட்ட மக்களும் பெற்றுக்கொண்டு சமூக, சமய மற்றும் அரசியல் விடுதலை பெற சீகன் பால்க் உதவினார் என்றால் மிகையாகாது.

## முடிவுரை

சீகன்பால்க் இந்தியா வந்த காலத்தில் தமிழ்மொழியைக் கார்மேகம் சூழ்ந்திருந்தது. தமிழ் மொழி இலக்கியம் தேக்கத்தில் ஆழ்ந்திருந்தது. அதனால் தமிழகத்தின் அரசியல், பொருளாதாரம், சமுதாயம் என்று அனைத்தும் வளர்ச்சியில் குன்றிப்போயிருந்தது என்கிறார் மீனாட்சிசுந்தரம், சீகன்பால்க் போன்ற கிறிஸ்தவ மிஷனெரிகளின் வரவால் ஒளியேற்றப்பட்டு தமிழ் மொழி இருளிலிருந்து விடுவிக்கப்பட்டது. வடமொழியின் துணையின்றி தமிழ்மொழியால் தனித்து இயங்கமுடியாது என்ற கூற்றைப் பொய்யாக்கியவர் சீகன்பால்க் ஆவர். தமிழ்மொழியின் தனித்துவத்தையும் அதன் பொக்கிஷமான இலக்கியங்களைத் தமிழர்கள் மட்டுமல்ல மேலை நாட்டவர்களும் அறியும்படி அதனை பல்வேறு மொழிகளில் மொழிபெயர்ப்பு செய்வதற்கு அடித்தளமாக இருந்தவர் சீகன்பால்க். இவரது முயற்சியால் அழிந்துபோகவிருந்த பல்வேறு ஓலைச்சுவடிகள் கண்டுபிடிக்கப்பட்டு ஜெர்மன் இலக்கியநடையான உரைநடை முறையில் நிறுத்தல் குறிகளோடு எழுதப்பட்டு பதிப்பிக்கப்பட்டு அச்சிடப்பட்டன. இவருடைய மொழி விடுதலைப் பணியால் உரைநடை இலக்கியத்துக்குப் புதிய உந்து சக்தி கிடைத்தது. நிலவியல், அறிவியல், வரலாறு, சிறுகதைகள், முதலிய துறைகள் தமிழில் இடம் பெற்றன. இன்றைய நவீன காலத்தில் உள்ள பத்திரிக்கைகள், வார மற்றும் நாளிதழ்கள் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியாக இருந்தது சீகனின் தமிழ் விடுதலைப்பணியாகும். பல்வேறு நூல்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகளை ஒரு நூலாக்கி வகுப்பறையில் பயன்படுத்தும் முறை இவர்மூலம் அறிமுகமானது.

வை.கோ போன்றோர் கிறிஸ்தவத்தையும் தமிழையும் பிரிக்கமுடியாது என்கிறார்கள். இந்துக்கள் சமஸ்கிரதத்திலும், இஸ்லாமியர்கள் அரபிய மொழியிலும் கடவுளை ஆராதிக்கிறார்கள், ஆனால் கிறிஸ்தவர்கள், மாத்திரமே தமிழில் கடவுளை ஆராதிக்கிறார்கள், ஆகவே கிறிஸ்தவர்களை எனக்குப் பிடிக்கும் என்று சீமான் என்னிடம் சொன்னார். உலகின் முதல் மொழி தமிழ் மொழி என்ற உண்மையை உலகிற்குச் சொன்னவர் தேவநேய பாவாணர். தமிழுக்கு இணையான மொழி வேறு இல்லையென்று மிஷனெரிகள் பலர் சொன்னார்கள். 'உலகமெங்கும் தமிழைக் கொண்டுசென்றது கிறிஸ்தவம் - அவர்களில் பலர் மதத்தைப் பரப்புவதற்குப் பதில் மொழியைப் பரப்பினார்கள், மற்ற இலக்கியங்களைப் படித்தார்கள், அதனையும் பரப்பினார்கள்' என்கிறார் சுபவீரபாண்டியன். அச்சு
வரவில்லை
என்றால் சங்க
இலக்கியங்கள் அனைத்தும் காணாமல் போயிருக்கும், திருக்குறள் காணாமல் போயிருக்கும், பைபிள் வந்திருக்காது, கிறிஸ்தவம் வளர்ந்திருக்காது என்று தமிழ் ஆர்வலர்கள் கூறுகிறார்கள். சீகன்பால்க்கின் அருட்பணியை இந்திய அரசாங்கம் அங்கீகரித்து 2006ம் ஆண்டில் அவருடைய 300வது ஆண்டு நினைவுநாளை கொண்டாடும் விதமாக தபால் தலை ஒன்றை வெளியிட்டுப் புகழாரம் சூட்டியது

தமிழ்ப் பண்பாடு தழைக்கவேண்டுமானல் அதன் இலக்கியம் புறக்கணிக்கப்படக்கூடாது, இலக்கியம் பாதுகாக்கப்படவேண்டுமானால் அது அனைத்து மக்களையும் சென்றடையவேண்டும். அதற்கு மொழி பரிமாற்றம் அவசியம். அப்பரிமாற்றத்தைத் தமிழ், இலத்தீன், ஜெர்மன் போன்ற மொழிகளிடையே ஏற்படுத்தியவர் சீகன்பால்க். தமிழகத்தில் தமிழ் உரைநடை தந்தையெனச் சிறப்பிக்கப்படும் ஆறுமுக நாவலரும், தாண்டவராய முதலியாரும், தமிழ் உரைநடை வளர்ச்சிக்குப் பெருந்தொண்டு புரிந்தார்கள் என்றால் அவர்களுக்கு ஆணிவேராக இருந்தவர் சீகன்பால்க் ஆவார். சீகன்பால்க் போன்ற தமிழ் பற்றாளர்கள் தமிழ் இலக்கியங்களின் உச்சத்தைத்தொடாமல், அவர்கள் சென்ற உயரத்திற்கு அப்பால் அவர்கள் செல்லவில்லை. அத்துடன் அவர்களைத் தொடர்ந்து வந்தவர்கள் அதையே போதும் என்றிருந்தவர்கள் அநேகர். கால்டுவெல் மற்றும் ஜி.யு.போப் போன்ற சிலர் திருக்குறள் போன்ற தமிழ் இலக்கியங்களின் உச்சத்தைத் தொட்டு அதனைப் பல்வேறு மொழிகளில் மொழிபெயர்த்து ஊரே அறியாத திருக்குறளை உலகறியச் செய்ய வித்திட்டது சீகன்பால்க் போன்ற முன்னோடிகளின் அருந்தொண்டாகும்.




துணைநின்ற நூல்கள்
ஐரோப்பிய தமிழ்ப்பணி, தமிழ் இலக்கிய வரலாறு.
இடையன்குடி இமயம் பேராயர் இராபர்ட் கால்டுவெல்

# புத்தக அறிமுகம்

மரபும் புதுமையும் சங்கமிக்கும் கவிதைகளின் அணிவகுப்பு கிறித்தியலுக்குக் கட்டியம் கூறும் விந்தைத் தொகுப்பு கவிதை நுட்பங்கள் மணக்கும் கலை நந்தவனம். சொற்கள் தாமாகவே புனைந்து கொண்டு



டாக்டர் மோ.மைக்கேல் பாரடே

கவிதைகளாக நிற்கின்றன. ஏக்கம், கோபம், அழுகை, அன்பு, பக்தி எதுவாயினும் கவிதைகளாகப் பூத்துக் குலுங்குகின்றன. அவையே 'ஏட்டில் வடித்த ஏதேன் எனும் பெயரில், பாட்டில் வடித்த பைந்தமிழ்ப் பனுவலாய்ப் பரிணமித்துள்ளன. கலை மணம் கமழும் காஞ்சியில் பிறந்து, தமிழ் மணம் கமழும், மதுரையில் மணம் கொண்ட இந்நூல் ஆசிரியராகிய "மதுரைக்காஞ்சியார்', கால் நூற்றாண்டுக்கும் மேலாக சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் பேராசிரியராகவும், தமிழ்த்துறைத் தலைவராகவும், கலைப்புல முதன்மையர் ஆகவும், பணியாற்றிய சிறப்புக்குரியவர். தஞ்சை வேதநாயக சாஸ்திரியார் பேரவை, உலகக் கிறித்தவத் தமிழ்ப் பேரவை, தேசியத் தலைமையாளர் பயிற்சி நிறுவனம், அறிஞர் பேரவை, கிறித்தவ ஆய்வு மற்றும் ஆவணப்படுத்தும் மையம் போன்ற அமைப்புகளில் பொறுப்பு மிக்க பங்களிப்புகளையும், தகைமை சான்ற தலைமைத்துவத்தையும் வழங்கி வருபவர். 'சிலுவை வழிச் சிந்தனைகள்', 'சிலுவையைக் குறித்தே' முதலிய அருளுரைத் தொகுப்புகளையும், 'ஈரக்குழல் பூக்கள்', 'சிலுவையினடியில் சிந்திய மலர்கள்' போன்ற கவிதைத் தொகுப்புகளையும், 'தஞ்சை வேதநாயகர் தமிழ்க்கொடை' , 'தமிழ்ச் சித்தர் பாடல்களும் விவிலியமும் (கடவுட் கொள்கைகள்) ஆகிய அரிய ஆய்வு நூல்களையும் வழங்கிய பெருமையோடு, ' இரட்சணிய யாத்திரிகம்' (மூன்று தொகுதிகள்), வேதநாயக சாஸ்திரியாரின் 'முத்தமிழ் முத்துகள் மூன்று' முதலிய நூல்களின் பதிப்பாசிரியராகவும், 'ஒரே வழி' , 'புது வாழ்வு' , 'தரு' ( ஆய்விதழ் ) முதலிய இதழ்களின் ஆசிரியராகவும், 'ஞான நொண்டி நாடகம் ' , 'கிறிஸ்து குலக்கும்மி', முதலிய அரிய இலக்கியங்களின் உரையாசிரியராகவும், "The Pentecostal Century, Cool Waters on a Thirsty Land" முதலிய ஆங்கில நூல்களின் மொழி பெயர்ப்பு ஆசிரியராகவும், அமைந்து, தாய்த்தமிழுக்குத் தம் பன்முகக் கொடைகளை இன்முகத்தோடு, இடையறாப்பணிகளால் ஈந்து வருபவர். அமெரிக்கா, இங்கிலாந்து, கனடா, பிலிப்பைன்ஸ், சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, தாய்லாந்து என இவரது பயணங்களும் தொடர்கின்றன. இவரது கவிதைப் பயணத்தின் நிகழ்நிலைப் பதிவே இந்த ' ஏட்டில் வடித்த ஏதேன்'.

சுமார் 200 பக்கங்களில் பல்வண்ண அச்சமைப்பில் - கண்ணையும் கருத்தையும் கவரும் படங்களோடு - சிறந்த கட்டமைப்பில் வெளிவந்துள்ள இந்நூல், "ஏட்டில் வடித்த ஏதேன்" என்னும் தலைப்புக்கேற்ப, தெய்விக நந்தவனத்தில் மலர்ந்துள்ள 8 வகை மலர்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இப்பகுப்புகளில், பண்பட்ட இக்கவிஞர், பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு இதழ்களில் எழுதியனவும், பல்வேறு மாநாடுகள், கவியரங்கங்களில் வாசித்தனவுமாகிய கவிதைகளும் பல்வேறு கிறிஸ்தவச் சிறப்பு விழாக்களுக்காக எழுதிய கவிதைகளும் இயேசுவின் ஏழு சிலுவைத் திருமொழிகள் பற்றிய சிந்தனைக் கவிதைகளும் பல்வேறு இசைப் பேழைகளுக்காக இயற்றிய இசைப்பாடல்களும் இடம்பெற்றுள்ளன.




கிறிஸ்து நெறி சார்ந்த பல்வகைப் பொருண்மைகளை, இவ்வளவு இனிய தமிழில் வண்டமிழ்க் கவிதைகளாக வடித்திட இயலுமா எனப் படிப்போர் வியந்து சுவைத்துப் பரவசப்படும் வண்ணம் நூலின் உள்ளடக்கம் உள்ளத்தைக் கவருகிறது. கன்மிகு நூல்களை வடிவமைக்கும் கைத்தடி பதிப்பகத்துப் துணையோடு, கிருபா பதிப்பகம் வெளியிடுள்ள இந்தப் புத்தகம் கிடைக்கும் இடம்


டாக்டர் மோ.மைக்கேல் பாரடே
1, ஐந்தாவது குறுக்கு தெரு,
தனலட்சுமி நகர், சேலையூர்.
சென்னை 600073
Phone : 9003197577